# சிவாஜி

ஞாயிறு வெளியீடு

SHIVAJI
TAMIL WEEKLY
28th year
of Publication
17—3—1963

அரசியல், தொழில் வள, சமுதாய நல, கலை, இலக்கிய வார இதழ் ✦ ஆசிரியர்: திருலோகசீதாராம்


# ஜி. டி. நாயுடு நன்கொடை

## தேசீயப் பாதுகாப்பு நிதிக்கு இரண்டரை லட்ச ரூபாய்கள்

★

## தமிழ் நாட்டில் தனி ஒருவர் வழங்கிய நன்கொடைகளில் பெருந் தொகை என்று முதலமைச்சர் காமராஜர் பாராட்டு.

★

### அவசர கால நெருக்கடியில், அவரது ஆறுவார காலத் தொழிற்பயிற்சி பயன் தரும்.

★

**கோ**வைத் தொழில் மன்னர் ஜி. டி. நாயுடு நெடுங்காலமாக அநீதிக்குப் பணிய மறுத்து, சுமார் பதினைந்து வருட காலம் தமது எல்லாத் தொழில் முயற்சிகளையும் ஒத்தி வைத்துவிட்டு வருமான வரி இலாகாவுடன் போராடுவதே தமது ஒரே தொழிலாக இழுத்துக் கொண்டு நின்றவர். வருமான வரி கொடுக்காமல் மறைத்துவிட்டு அரசாங்கத்தாரின் பிடியிலிருந்து விடுபடப் போராடுகிறவர்கள் பலருண்டு. ஆனால் நியாயமான வரியைச் செலுத்தும் ஒருவனுக்கு வருமான வரி இலாகா கொடுக்கும் தொல்லைக்குப் பரிகாரம் வேண்டிப் போராடியவர்களில் இவரைப் போன்ற பிடிவாதமும் துணிவும் நேர்மை உணர்ச்சியும் படைத்தவர்கள் யாருமிருக்கமாட்டார்கள்.

அரசியல், அரசாங்கங்கள், பதவிகள், ஆகிய எவற்றிலும் இவருக்குப் பெருமதிப்போ நம்பிக்கையோ கிடையாது. ஆனால் சமூக நீதிக்கும், நல்லாட்சிக்கும் உட்பட்டு நடக்கும் சிறந்த பிரஜை இவர்.

சமய நெறிகளுக்கும், கடவுட் கொள்கைக்கும் இவர் எதிரி. ஆயினும் சமயங்கள் விரும்பும் உன்னதமான நற்பண்புகளும் கடவுட் பக்தர்கள் அடைய விரும்பும் அன்பு நெறியும் இவரது நடைமுறைக் கொள்கைகள்.

பெருஞ் செல்வம் திரட்டுவதில் ஊக்கம் மிகுந்தவர் இவர். எனினும் ஆடம்பரத்தைச் சற்றும் விரும்பாத பொருளாதார அறிஞர். புதிய தொழில் ஊக்கங்களைத் தோற்றுவித்து நடத்தும் வாணிபத் திறம் இவருக்குண்டு. எனினும் கொள்ளை லாபம் விரும்பாமல், குறைந்த விலையில் பொருள்கள் மக்களுக்குக் கிடைக்க வேண்டுமென்ற நன்நோக்கம் படைத்தவர்.

சங்கீதம், நடனம், சித்திரம், மொழி அறிவு போன்ற நுண் கலைகளைக் காட்டிலும், விவசாயம், விஞ்ஞானம், போன்ற அறிவை வளர்ப்பதில் இவருக்கு நாட்டம் மிகுதி. என்றாலும் எந்தக் கலையில் வல்லவராயினும் மேதைகளுக்கு மதிப்பளித்துப் போற்றுவதில் யாருக்கும் பின்வாங்காதவர்.

பற்பல தடவைகள் உலக யாத்திரை மேற்கொண்டவர். ஆனால் உல்லாச யாத்திரை ஒரு தடவை கூட இருக்காது. பிற நாடுகளின் தொழில் விஞ்ஞான சாதனைகளை நேரில் காணவும், தாய் நாட்டுக்குப் பயன் தரக் கூடிய சாதனைகளைக் கொண்டு வந்து பயன்படுத்தவுமே ஒவ்வொரு தடவையும் அவர் பாடுபட்டிருக்கிறார். உள் நாட்டில் அவரது காரியங்களையும் பேச்சுக்களையும் புரிந்து கொண்டுள்ள மக்களைக் காட்டிலும் வெளி நாடுகளில் இவரது மேதையை உணர்ந்து போற்றி, இவரிடம் பயிற்சியும் பெற விரும்பும் அறிஞர்களின் எண்ணிக்கை மிகவும் அதிகம்.

இவருக்கு, பந்த பாசங்கள் போன்ற மன நெகிழ்ச்சிகள் இல்லவே யில்லை யென்றும் கரையாத கன்னெஞ்சுடையவரென்றுமே யாருக்கும் தோன்றும். ஆனால் வளரும் தலைமுறையைச் சேர்ந்த மாணவர்களின் பால் இவர் வைத்துள்ள அன்பும் பாசமும் அகண்டாகாரமானது. இன்றைய கல்வி முறையும் கல்விச் சாலைகளும், இளைஞர்களின் வயதையும் பெற்றோரின் அரிய செல்வத்தையும் வீணாக்கிக் காலக் கொலை செய்து வருகின்றன என்று கருதும் இவர் கல்வித் திட்டங்களை மாற்றி மிகவும் குறுகிய காலத்தில் அதிகச் சிக்கனமாகக் கல்விப் பயிற்சி தர முடியுமென்ற திட்டமான கொள்கையும் உடையவர்.

நான்கைந்து ஆண்டுகள் தொழில் நுட்பக் கல்லூரிகளில் பல்லாயிர ரூபாய்கள் செலவு செய்து ஒரு மாணவன் பெறுகின்ற கல்வியை ஓரிரண்டு ஆண்டுகளில் முடிக்க முடியுமென்று நிரூபித்தும் காட்டியுள்ள மேதை இவர்- அரசாங்கமும் சர்வகலாசாலையினரும் இவரது இந்த நிரூபணத்தை ஒப்புக்கொண்ட போதிலும், நாட்டில் ஒரே ஒரு ஜி. டி. நாயுடு மட்டும் தான் இருப்பதால் அவரது வழியைப் பின்பற்றுவது இயலாத காரியமென்று ஒரு தடவை கூறிவிட்டனர்.

வருமான வரி இலாகாவுடன் போராடி வந்த காலத்தில் யாருக்கும் எவ்வித நன்கொடையோ, யாசகமோ, உதவியோ, சிபார்சோ தாம் செய்ய முடியாது என்று இவர் கூறி வந்த போதிலும், கல்வித்துறையிலும், விஞ்ஞான, விவசாய, மருத்துவ ஆராய்ச்சித் துறைகளிலும் இவர் ஊக்கம் குறையாது உழைத்து வந்ததுடன், பற்பல இளைஞர்களுக்கு உதவியும் வந்தார்.

ஆண்டு தோறும் கோடை காலத்தில் ஆறு வார யந்திரத் தொழில் விஞ்ஞானப் பயிற்சி வகுப்புகளைச் சென்ற சுமார் 15 வருடங்களாக இவர் தமது கோபால் பாக் மாளிகையில் நடத்தி வருவதும், பிற கல்லூரிகளில் பயில்வோர், கோடை விடுமுறையைப் பயன்படுத்தி, இவரது குறுகிய காலப் பயிற்சி வகுப்புக்களில் படித்து மிகச் சிறந்த நேரிடைத் தொழில் ஆற்றல் பெற்று வந்திருப்பதை

( 4-ம் பக்கம் பார்க்க )



ஜி. டி. நாயுடுவும் அறிஞர் விஸ்வேஸ்வரய்யாவும்.

மனதால், வாக்கால், செயலால்
நாட்டிற்காக உழைப்போம்.

அருமையான சுதந்திரத்தைக் காக்க
அதிகம் சேமியுங்கள்.

# எழுத்தறிவுக் கிராமம்

## திண்ணைப் பள்ளியிலிருந்து தோன்றிய கல்வி நிலையம்

★

பத்தாண்டுகளுக்கு முன்பு குளிர் காலத்தில் ஒரு நாள் காலையில் அலஹாபாத் நகரில் ஒரு சிறு வாடகை வீட்டில் 73 வயதான அமெரிக்க மூதாட்டி ஒருவர் சிறு பள்ளிக்கூடம் ஒன்றை அமைத்தார். வராந்தாவில் வகுப்புகள் நடைபெற்றன. எழுத்தறியாமை என்னும் மாபெரும் பகைவனை ஒழிக்க அவ்வம்மையார் தன்னந்தனியராகப் போர் தொடுத்தார். முதியோர்க்குக் கல்வியறிவூட்டும் பணி அது.

பத்தாண்டுக் காலத்துக்குள் அந்தத் திண்ணைப் பள்ளிக்கூடம் ஆல் போல வளர்ந்து, இன்று லட்சுமணபுரி நகர்ப் புறத்தில் 10 ஏக்கர் நிலத்தில் மாபெரும் கல்விக் கூடமாகத் திகழ்கிறது.

சமூகக் கல்வித் துறையில் துணிந்து இப் பெரு முயற்சி முயற்சி தொடங்கிய அமெரிக்கப் பெண்மணியின் பெயர் வெல்தி பிஷர்; அவருக்கு உள்ளொளி ஊட்டியவர் மகாத்மா காந்தி. 1947 டிசம்பர் மாதத்தில் அதாவது காந்திஜி மறைவதற்கு ஆறு வாரத்துக்கு முன் காந்திஜியிடம் சென்றார், வெல்தி பிஷர். அவர் நெடுங்காலம் காந்திஜியின் நண்பராக இருந்தவர். தம் கணவர் காலமான பின் அம்மையார் அமெரிக்காவுக்குப் புறப்பட்டார். அப்போது காந்திஜி அவரிடம் பின்வருமாறு சொன்னார்: 'இந்தியாவுக்கு நீங்கள் திரும்பி வந்தால், கிராமங்களுக்குப் போங்கள். கிராமங்களில் தான் உண்மையான இந்தியாவைக் காணலாம். கிராம வாசிகளோடு வாழ்ந்து அவர்களுக்கு உதவி செய்யுங்கள்.'

1952-ல் திருமதி வெல்தி பிஷர் இந்தியாவுக்குத் திரும்பி வந்தார். புதிதாய் எழுதப் படிக்கக் கற்றுக் கொள்ளும் முதியவர்களுக்காக, புகழ் பெற்ற அறிஞர்கள் எழுதிய புத்தகங்களை சேகரிக்க அவர் விரும்பினார். இந்திய மக்களுக்கு உதவி செய்ய வேண்டும் என்பது அவரது ஆவல். ஆனால் எவ்வாறு உதவி செய்வது என்பது அவருக்குத் தெரியவில்லை.

திடீரென்று அவருக்கு ஒரு வழி பிறந்தது. முதியோர் எழுத்தறிவுத் துறையில் தமக்கு உதவி செய்ய வேண்டுமென்று அலகாபாத் வேளாண்மைக் கல்லூரி முதல்வர் அம்மையாரிடம் கேட்டார். அம்மையார் பணி செய்ய இணங்கினார். எனவே எழுத்தறிவு இல்லத்துக்கு அடிப்படை பிறந்தது. மக்களில் முக்கால் வாசிப் பேருக்கு எழுதப் படிக்கத் தெரியாது. இந்நிலையில் சரியான எழுத்தறிவுத் திட்டம் ஒன்றை முதன் முதல் அமைக்கும் வாய்ப்புப் பெற்றார், திருமதி பிஷர்.

திருமதி பிஷர் நியூயார்க் மாநிலத்தில் பிறந்து வளர்ந்தவர். 1920-ம ஆண்டில் அவர் முதன் முதலாக இந்தியாவுக்கு வந்தவர். அதற்கு நான்கு ஆண்டுகளுக்குப் பின் அவர் கல்கத்தாவில் மெதடிஸ்ட் பிஷப்பாக இருந்த பிரடெரிக் பி. பிஷர் என்பவரை மணந்து கொண்டார். அவர்கள் இருவரும் இந்திய சுதந்திரப் போராட்டத்துக்கு ஆதரவளித்தார்கள்; காந்தி, தாகூர், ஸி. எப். ஆண்ட்ரூஸ், மோதிலால் நேரு, சரோஜினி நாயுடு முதலியவர்களுக்கு நண்பர்கள். 1938-ல் பிஷப் பிஷர் காலமானார். தம் கணவர் காலமானபின் திருமதி பிஷர் காந்திஜியின் சேவாகிராம் ஆசிரமத்தில் சிறிது காலம் தங்கினார்.

### லட்சுமணபுரி இல்லம்

1958 முதல் எழுத்தறிவு இயக்கப்பணி லட்சுமணபுரியில் நடைபெற்று வருகிறது. அது ஒரு கிராமமாக விளங்குகிறது. அங்கு பல செங்கற் கட்டடங்கள் உள்ளன. எழுத்தறிவுக் கிராமத்தில் அலுவலகங்களும், வகுப்பு அறைகளும், நூலகமும், திறந்த வெளியரங்கும், தொழிற்கூடமும், சிற்றுண்டிச் சாலையும், விளையாடும் இடங்களும், மாணவர் இல்லங்களும், ஆசிரியர் விடுதிகளும் உள்ளன. கிராமத்தின் நடுவில் எல்லாமதத்தினரும் வழிபடும் கோயில் ஒன்று உண்டு. 1959-ல் ஜனாதிபதி ராதாகிருஷ்ணன், திறப்பு விழாவை நடத்தி வைத்தார்.

ஆசிரியர்களுக்குப் பயிற்சி அளிப்பதே எழுத்தறிவு இல்லத்தின் முக்கிய பணி. இந்தியாவின் எண்ணிறந்த கிராமங்களில் வாழும் மக்களுக்கு எழுதப் படிக்கக் கற்றுக் கொடுக்க விரும்பும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் எழுத்தறிவு இல்லத்தில் பயிற்சி அளிக்கப்படுகிறது. பள்ளி ஆசிரியர்களும், சமூக ஊழியர்களும், கூட்டுறவுச் சங்க அமைப்பாளர்களும் இங்கு பயிற்சி பெறுகிறார்கள். நாள் முழுவதும் தங்கள் வேலைகளைச் செய்தபின் இரவு நேரத்தில் அவர்கள் முதியோருக்கு எழுதப் படிக்கக் கற்றுக் கொடுக்கிறார்கள்.

இல்லம் நடைபெற்று வரும் சென்ற பத்தாண்டுக் காலத்தில் 6000 எழுத்தறிவு இயக்க ஆசிரியர்கள் பயிற்சி பெற்றிருக்கிறார்கள். பள்ளி செல்லும் வயது தாண்டிய 1,52,000 பேருக்கு அவர்கள் எழுதப் படிக்கக் கற்றுக் கொடுத்திருக்கிறார்கள்.

எழுத்தறிவுத் திட்டம் கிராம வாசிகளைக் கவர வேண்டும்; அதனால் அவர்களுக்குப் பயன் விளைய வேண்டும். எனவே, கிராமங்களின் தேவைகளை உணர்ந்து அவற்றிற்கு ஏற்ற முறையில் எழுதப் படிக்கக் கற்பிக்கப்படுகிறது. வேளாண்மை வளர்ச்சி, சுகாதாரம், துப்புரவு, குடி உரிமைகள், பொறுப்புக்கள் முதலியவை பற்றிய புத்தகங்களைப் படிக்க அவர்களுக்குக் கற்பிக்கிறார்கள். எழுத்துக்களை அறிந்து கொள்ளக் கற்றுக் கொடுப்பது மட்டும் இத்திட்டத்தின் நோக்கம் அல்ல.

### கற்பிக்கும் கருவிகள்

25 மாணவர்களுக்குத் தேவையான பொருள்கள் அடங்கிய தொகுப்பு ஒன்றை வழங்கி, எழுத்தறிவுத் திட்டத்தை எங்கும் பரப்புகிறார்கள். தொகுப்பில் முதல் பாடப் புத்தகங்களும், எழுத்தறிந்தபின் படிக்க வேண்டிய புத்தகங்களும், எழுத்து அட்டைகளும், சிலேட்டுகளும், கரும் பலகைகளும் உள்ளன. ஒரு வகுப்பு நடத்துவதற்கு வேண்டியவை இவை. 'கேர்' சங்கம் இவற்றை வழங்கியுள்ளது. மின் விளக்கு இல்லாத இடங்களில் பயன்படுத்தக்கூடிய விளக்கும் இவற்றோடு கொடுக்கப்படுகிறது. 1959ல் இத் திட்டம் தொடங்கப்பட்டது. இதற்குள் 900 தொகுப்புகளுக்கு மேல் வழங்கப்பட்டுள்ளன.

எழுத்தறிவு இல்லம் இந்தப்பணிகள் செய்வதுமல்லாமல், சோதனை செய்து பார்ப்பதற்கு 16 முதியோர் பள்ளிகள் நடத்துகின்றது. அவற்றில் 6 லட்சுமணபுரி நகரிலும், 10 சுற்றுப்புற ஊர்களிலும் உள்ளன; கான்பூரில் தொழிற்சாலைத் தொழிலாளர்களுக்கு 20 பள்ளிகள் நடைபெறுகின்றன. கிராமப் பெண்களுக்குத் தனி வகுப்புகளும் எழுத்தறிவு இல்லத்தில் நடக்கின்றன. நான்கு ஆண்டில் கற்க வேண்டியவற்றைப் பெண்கள் இரண்டே ஆண்டில் கற்று முடிக்கிறார்கள். கிராமத் தலைவர்கள் 1933 பேருக்கும் பயிற்சி அளிக்கப்பட்டுள்ளது.

எழுத்தறிவு இல்லம் எழுத்தாளர் பயிற்சிக்கூடம் ஒன்றும் நடத்துகிறது. அப் பயிற்சிக்கூடம் போர்டு அற நிலையத்தின் நிதிஉதவியால் 1958-ல் நிறுவப்பட்டது. பல மொழிகள் பேசும் எழுத்தாளர்களுக்கும் அது பயிற்சி அளிக்கிறது. புதிதாய் எழுதப் படிக்கக் கற்கும் முதியோர்களுக்கு ஏற்ற புத்தகங்கள் எழுத அங்கு பயிற்சி நடைபெறுகிறது. அந்தப் புத்தகங்கள் மிகவும் எளிமையானவையாகவும், கிராமவாசிகளுக்குப் பயன் படக்கூடிய பொருள்கள் பற்றியவையாகவும் இருக்க வேண்டும்.

### எழுத்தாளருக்குப் பயிற்சி

ஆண்டுக்கு மூன்று தடவை எழுத்தாளர் பயிற்சிக் கூடம் மூன்று மாதப் பயிற்சி நடத்துகிறது. பத்திரிகையாளர்களும், எழுத்தாளர்களும் புதிதாய் கல்வி கற்கும் முதியோர் படிப்பதற்குரிய புத்தகங்கள் எழுதும் நுட்பங்களைப் பயில்கிறார்கள்; அது பற்றி ஆராய்கிறார்கள்; அவர்களும் புத்தகங்கள் எழுதுகிறார்கள்; சுற்றுப்புறக் கிராமங்களில் தாங்கள் எழுதிய நூல்களை வழங்கிச் சோதனை செய்து பார்க்கிறார்கள். இத்தகைய 11 பயிற்சிக் கூடங்கள் நடைபெற்றுள்ளன. அவற்றில் 146 எழுத்தாளர்கள் பயிற்சி பெற்றிருக்கிறார்கள். ஆப்கானிஸ்தான் அரசாங்கம் அனுப்பிய 11 அதிகாரிகளுக்கு சென்ற ஜனவரி முதல் சிறப்புப் பயிற்சி வகுப்பு ஒன்று நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. கற்பிக்கும் கருவிகள் உற்பத்தி செய்யும் நிலையமும் அங்கு உள்ளது. கேள்வி-காட்சி கருவிகள் அங்கு செய்யப்படுகின்றன. புத்தகங்களும், மற்றும் சிறு வெளியீடுகளும் அங்கு பதிப்பாகின்றன.

எழுத்தறிவு இல்லம் இது வரை 55 புத்தகங்கள் வெளியிட்டுள்ளது. அவை வேளாண்மை, சுகாதாரம், கல்வி, நல்ல இல்லங்கள், குடும்பக் கட்டுப்பாடு, ஜனநாயகம் முதலியன பற்றியவை. முதியோர் இலக்கிய தேசியப் புத்தகப் போட்டிகளில் இவற்றில் பல புத்தகங்களுக்குப் பரிசுகள் கிடைத்துள்ளன. 4 லட்சம் பிரதிகளுக்கு மேல் விலையாகியுள்ளன. எழுத்தறிவு இல்லம் 'உஜாலா' என்னும் ஹிந்தி வாரப் பத்திரிகை ஒன்றும் வெளியிடுகிறது; 5000 பிரதிகள் செலவாகின்றன. எழுத்தறிவு இல்லத்தை நடத்தும் நிலையம் லாப நோக்கமற்ற சங்கம். இந்திய எழுத்தறிவுக் கழகம், நியூயார்க் நகரிலுள்ள உலக கல்விச் சங்கத்தோடு சேர்ந்து இதை நிர்வகிக்கிறது. திருமதி பிஷர் இந்த நிலையத்தின் தலைவி. இந்திய அரசாங்கத்தின் மத்திய சமூக நலக் கழகம், பிர்லா கல்வி அற நிலையம், போர்டு அற நிலையம், கேர் சங்கம், கானடாவிலுள்ள உலக எழுத்தறிவுச் சங்கம் முதலிய தேசிய, சர்வதேச நிலையங்கள் எழுத்தறிவு இல்லத்துக்கு நிதி உதவி அளிக்கின்றன. ●●


குழந்தைகளின் புஷ்டிக்கு ரமணின் பேபிக்ரைப்
சகல நோவுகளுக்கு எல்லிஸ்பாம்
காயம் சொரி சிரங்குகளுக்கு சைபால்
தி சௌத் இந்தியன் மான்யுபாக்சரிங் கம்பெனி. மதுரை.

ஸ்ரீ அம்பாள் ஆபீசர் பொடி
அனைவரும் விரும்புவது
10 & 25-கிராம் டின்களிலும் கிடைக்கும்
ஸ்ரீ அம்பாள் & கோ. தங்கசாலை தெரு, மதராஸ்-1.

M/s G. RADHAKRISHNA CHETTIAR Sons
Jewellers
TIRUCHY-8.
பவுன் நகைகள் வெள்ளிப் பாத்திரங்களுக்கு
M/s ஜி. ராதாகிருஷ்ண செட்டியார் சன்ஸ், திருச்சி-8.
PHONE: 2037
TEL: RELIABLE.
மானேஜிங் பார்ட்னர் R. ஜெயதேவன்

கைத்தறி, பட்டு, நூல் & மில் ஜவுளிகளுக்கு
M.N. நாகேந்திரம் சன்ஸ்
மலைவாசல்........திருச்சி.


**அரியலூர் டி. மு. கோ**

O. S. 691/62

N. ராமசாமி ரெட்டி —வாதி
நல்லு— 1ம் பிரதிவாதி

ஷை வாதிக்கு, நீரும் 2-3 பிரதிவாதிகளும் எழுதிக் கொடுத்திருந்த புரோநோட்டுப்படி 523-35 nP கிடைக்க தாவா செய்து, 25-3-1963 தேதி ஈரங்கி வைத்திருக்கிறது. அன்று கோர்ட்டில் ஆஜராகத் தவறினால் எக்ஸ்பார்ட்டி செய்யப்படும்.

N. ஸ்ரீனிவாசய்யங்கார்
அட்வகேட்.

1 | 5485 | 187

# டில்லி தமிழ் நாடக விழா

தேசிய பாதுகாப்பு நிதிக்காகப் புதுடில்லி தென்னிந்திய நாடக சங்கமும், சென்னை சேவாஸ்டேஜ் குழுவினரும் டில்லியில் நடத்திய தமிழ் நாடக விழா இந்த வாரம் தமிழ் மக்களிடையே பெரிய குதூகல நிகழ்ச்சியாக அமைந்தது. டில்லியில் தமிழ்த் திரைப்படங்களோ, நாடகங்களோ நடைபெறுவது மிக மிகக் குறைவு. அதிலும் தமிழகத்திலிருந்து பெயர் பெற்ற பிரபல நாடகக் குழுவினர்கள் இங்கு வந்து நாடகம் நடத்துவதென்பது இன்னும் அருமை. கடந்த மூன்று நான்கு ஆண்டுகளாகத்தான் ஆண்டுக்கொரு முறை இது போல நாடகங்கள் நடைபெறுகின்றன. கலை அபிமானிகளான தமிழ் மக்கள் பெரிய அளவில் வாழும் இந்தியத் தலைநகரில் இப்படி ஒரு நாடக விழாவை நடத்தித் தமிழ் மக்களுக்கு நாடகம் பார்க்கும் வாய்ப்பைக் கடந்த சில ஆண்டுகளாக உண்டாக்கித் தரும் தென்னிந்திய நாடக சங்கத்தினரின் கலைத்தொண்டு பாராட்டத் தக்கது.

இந்திய ரயில்வே துணை அமைச்சர் திரு. எஸ். வி. ராமசாமியைத் தலைவராகக் கொண்டு இயங்கி வரும் தென்னிந்திய நாடக சங்கம் 1958ல் தொடங்கப்பட்டது. 1960ல் இவர்கள் டில்லியிலேயே முதல் முறையாகத் தமிழ் நாடக விழா ஒன்றை வெற்றிகரமாக நடத்தினார்கள். அந்த நாடக விழாவில் சென்னை சேவாஸ்டேஜ் குழுவினர் டில்லிக்கு வந்து தங்களுடைய நாடகங்களை முன்னாள் குடியரசுத் தலைவர் ராஜேந்திர பிரசாத், திரு. வி. கே. கிருஷ்ணமேனன் டாக்டர் இராதாகிருஷ்ணன் ஆகியோர் முன்னிலையில் ஐந்து நாட்கள் வெற்றிகரமாக நடத்தினார்கள். ஆனால் இந்த ஆண்டு நடத்தப் பெற்ற தமிழ் நாடக விழா வேறு ஒரு முறையில் மிகப் புரட்சிகரமாக இருந்தது. இம்முறை சென்னையிலிருந்து எல்லா நடிகர்களும் வராமல் சேவாஸ்டேஜ் முதல்வர் திரு. சகஸ்ரநாமம், நெஞ்சில் ஓர் ஆலயம் புகழ் முத்துராமன், திரு. கோபால கிருஷ்ணன், எஸ். என். லட்சுமி, என். ஆர். சாந்தினி என்ற ஐவர் மட்டுமே இங்கு வந்தார்கள்.

இந்த நாடகங்களில் நடித்த பிற எல்லோரும் டில்லியின் அரசாங்க அலுவலகங்களிலும் தனிப்பட்ட நிறுவனங்களிலும் வேலை பார்க்கும் அமெச்சூர் நடிகர்களேயாவார்கள். வெவ்வேறு இரண்டு இடங்களில் உள்ளவர்கள் வெவ்வேறு ஒத்திகை நடத்திவிட்டுப் பிறகு ஒன்றாய் இணைந்து ஒரு நாடகத்தைத் திறம்பட நடத்துவதென்பதுதான் இதில் புரட்சிகரமான முன்னேற்றம். நாடகத்தையே தொழிலாக உடையவர்களுடன் சேர்ந்து அமெச்சூர் நடிகர்களாயுள்ளவர்கள் சற்றும் தரம் குறைவில்லாமல் நடித்தது இன்னும் பெரிய பாராட்டுக்குரியது. விழாவின் நான்கு நாட்களிலும் முறையே இந்திய கனரகத் தொழில் அமைச்சர் திரு. சி. சுப்பிரமண்யம், செய்தி ஒலிபரப்புத் துறை அமைச்சர் திரு. கோபால ரெட்டி, இந்திய இரயில்வே அமைச்சர் திரு. ஸ்வரன் சிங், விஞ்ஞான ஆராய்ச்சி கலாச்சார உறவு அமைச்சர் திரு. ஹுமாயூன் கபீர் ஆகியோர் தலைமை வகித்து நாடகங்களைக் கண்டு பாராட்டி ஆர்வ மொழி பகர்ந்தனர். இந்த நான்கு அமைச்சர்களும் ஒரே கருத்தைப் பிரதிபலித்து டில்லி தமிழ்ச் சமுதாயத்தின் கலை அபிமானத்தையும் எந்தச் செயலையும் திறம்படச் செய்யும் பண்பையும் தேசப் பற்றையும் பாராட்டியது இங்கு குறிப்பிடத் தக்கதாகும். தமிழர்களுக்கு ஆர்வ மொழி கூற வேண்டிய அவசியமே கிடையாது என்றும் அவர்கள் எந்தத் துறையிலும் பிற தென்னிந்திய சமூகத்தவர் பின்பற்றத் தக்க அளவில் காரியங்களை முன்னோடியாகச் செய்யக் கூடியவர்கள் என்றும் திரு. கோபாலரெட்டி இரண்டாம் நாள் நாடகத்தின் தலைமையுரையில் கூறிய உண்மை வாசகம் டில்லி தமிழர்கள் உள்ளத்தில் தேனாறாகப் பரவி இன்பமளித்தது. நாடகத்தின் ஒவ்வொரு நாள் தொடக்கத்திலும் தென்னிந்திய நாடக சங்கத் தலைவர் திரு. எஸ். வி. இராமசாமி தலைவர்களுக்கு நாடக விழாவின் நோக்கத்தை விரிவாக எடுத்துரைத்துச் சங்கத்தின் பணிகளையும் விளக்கினார்.

தமிழ் நாடக விழாவின் ஆரம்ப நாளில் தென்னிந்திய நாடக சங்கத்தைச் சேர்ந்தவர்களும் சேவாஸ்டேஜ் குழுவினரும் 'பூவிலங்கு' என்ற நாடகத்தை நடித்தனர். இந்த நாடகம் இந்திய விடுதலைப் போராட்ட காலக் கதையாகும். செல்வரத்தினம் என்ற கல்லூரி மாணவன் ஒருவன் பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிராக நடக்கும் பயங்கர சதி இயக்கத்தில் தொடர்பு கொள்கிறான். இதைச் சந்தேகித்த கல்லூரி பிரின்சிபால் செல்வரத்தினத்தின் பெற்றோர்களுக்குத் தகவல் கொடுக்கிறார். போலீசாரின் பிடியிலிருந்து தப்ப எத்தனிக்கும் ஒரு சமயம் செல்வரத்தினம் தற்செயலாகக் கல்லூரி பிரின்சிபால் வீட்டுக்குள்ளேயே ஏறிக்குதித்து ஒளிந்து அவளுடைய மகளைச் சந்தித்துக் காதல் கொள்கிறான். பிறகு நாடகம் முழுவதிலும் காதலுக்காகத் தாய்நாட்டு விடுதலை என்ற கடமையை விடுவதா அல்லது காதலை விடுவதா என்ற பிரச்னை செல்வரத்தினத்தைப் பற்றுகிறது. அவனது உள்ளத்தைக் கொள்ளை கொண்ட காதல் மங்கை சுந்தரவடிவு எத்தனையோ முறை வேண்டியும் அவன் தாய் நாட்டுக்காகச் செய்யும் தொண்டையே பெரிதாக மதித்துச் சதிக் கூட்டத்தை விட்டு விலக மறுத்துவிடுகிறான். இக்கூட்டத்தைப் பிடிக்கும் கடமையிலிறங்கியுள்ள போலீசு இன்ஸ்பெக்டர் குத்தாலலிங்கமோ சுந்தர வடிவை மணந்து கொள்ள வைத்த ஆசையில் தன் கடமையை விட்டுக் கொடுத்து நடந்துங்கூடக் கடைசியில் தன் ஆசை நிறைவேறாமல் தோல்வியுறுகிறான்.

இந்த நாடகத்தில் அமெச்சூர் நடிகர்கள் சேவாஸ்டேஜ் குழு நடிகர்களுடன் சமமாக நடிக்கும் ஆற்றல் பெற்றவர்கள் என்பதை நன்றாக நிரூபித்துவிட்டார்கள். அத்தனை பாத்திரங்களையும் இவர்களே ஏற்று நடித்திருந்தாலுங்கூட நாடகத்தின் சுவை குறைந்திருக்காது என்று நினைக்கும் அளவுக்கு அமெச்சூர் நடிகர்களின் நடிப்பு இருந்தது. உமா கிருஷ்ணமூர்த்தி, கிருஷ்ண குமாரி, மாப்பிள்ளை ஆகியோரின் நகைச்சுவை பாகமும் நடிப்பும் மிக நன்றாயமைந்தன.

போலி கௌரவத்தை விரும்பினால் என்னவெல்லாம் நிகழும் என்பதை அழகாகச் சித்தரிக்கும் நாடகம் 'அண்டர் செக்ரடரி' பிரபல இந்தி நாடக எழுத்தாளரான ரமேஷ் மேதாவால் எழுதப் பெற்ற இந்த நாடகத்தை அகில இந்திய வானொலியைச் சேர்ந்த திரு. பூர்ணம் விசுவநாதம் அழகான நகைச்சுவை நாடகமாகத் தமிழுக்கேற்ற விதத்தில் உருவாக்கியிருக்கிறார்கள்.

நாடக ஆரம்ப முதல் சபையில் இடைவிடாத சிரிப்பொலியும் கைதட்டலும் இருந்து கொண்டே இருந்தது. இந்நாடகத்தில் முழுக்க முழுக்க உள்ளூர் அமெச்சூர் நடிகர்கள் மட்டுமே நடித்தார்கள். பூர்ணம் விசுவநாதம், மாப்பிள்ளை, சாரதி, குமார் ஆகியோரின் இயற்கையான நடிப்பும் பேச்சும் நாடகத்தின் தரத்தை மிக உயர்த்தி விட்டது, போலி கௌரவத்தை விரும்பிய ராசம்மா தன்னுடைய கணவனைக் கூடச் சிறிது நேரம் வேலைக்காரனாக ஆக்கிவிட்டு வேறொருவரைத் தன் கணவர் என்று சொல்ல நேர்வதும் பிறகு வெளிப்படக்கூடிய பல தருணங்களில் ஒவ்வொருவரையும் கெஞ்சிப் பொய் சொல்லி நிலைமையைச் சமாளிக்க வேண்டித் தத்தளிப்பதும் நல்ல நீதி புகட்டக்கூடிய தத்துவமாயிருந்தது. ராஜம்மாவின் பாகத்தை ஏற்ற திருமதி அனுராதா இடத்திற்குப் பொருத்தமாக நடித்தார்.

எத்தனை முறை பார்த்தாலும் இந்த ஸ்ரீ நாடகம் மக்களுக்குச் சலிப்புத் தட்டாது. இதனை ஏற்கெனவே டில்லியில் இரண்டுக்கு மேற்பட்ட முறை நடத்தியிருந்தும் அபரிமிதமான கூட்டம் வந்திருந்தது.

மூன்றாம் நாள் விழாவில் நடத்தப்பட்ட 'நாலு வேலி நிலம்' என்ற நாடகம் டில்லி மக்களுக்குப் புதிதில்லை. இந்த நாடகத்தை 1962ல் டில்லி நாட்டிய சங்கம் நடத்திய நாடகப் போட்டியில் தென்னிந்திய நாடக சங்கத்தினர் நடித்துப் பெரும் பாராட்டுப் பெற்றனர். எந்த நாடகத்திலும் எந்த பாகத்தையும் திறம்பட ஏற்று நடிக்கக்கூடியவர்கள் தென்னிந்திய நாடக அங்கத்தில் அங்கம் வகிக்கிறார்கள்., என்பதற்கு இந்த நாடகத்தில் நிறைய அத்தாட்சி இருக்கிறது. பூர்ணம் விசுவநாதம், சந்தானம், உமா, ஸ்ரீராமச்சந்திரன் ஆகியோர் நடிப்பை இதில் சிறப்பாகக் குறிப்பிட வேண்டும்.

நான்காம் நாள் விழாவில் நடந்த போலீசுக்காரன் மகள் நாடகம்தான் இந்த நாடக விழாவுக்கே சிகரம் வைத்தது போல அமைந்தது. துன்பியல் முடிவைக் கொண்ட இந்த நாடகத்தில் என். ஆர். சாந்தினியின் சோகக் கட்ட நடிப்பைப் பாராட்டாதாரில்லை. திரைப்படம் பார்ப்பதைவிட நாடகம் பார்க்கும் போது மக்கள் கதாபாத்திரங்களின் உணர்ச்சியோடு அதிகமாக ஒன்றிவிட முடிகிறது என்று நாடக ஆரம்பத்தில் அமைச்சர் ஹுமாயூன் கபீர் கூறியதன் உண்மைத் தன்மையை இந்த நாடகம் கண்ட மக்கள் அனுபவ சாத்தியமாக உணர முடிந்தது. நாடகங்களின் நான்கு நாட்களிலும் வசூலான முழுத் தொகையையும் தேசீய பாதுகாப்பு நிதிக்கு இவர்கள் வழங்கி விட்டார்கள். இது மிகவும் பாராட்டுக்குரியது.

★

மோட்டார் சாமான்களுக்கு
பாரத் ஆட்டோஸ்டோர்ஸ்
போன்: 2359.
99. பட்டர்வர்த் ரோடு. திருச்சி 2.

கரூர் P.S. ராமசர்மாவின்
சக்தி சஞ்சீவி
ஈரல் தலை கட்டிகளுக்கு சிறந்தது
விபரத்திற்கு எழுதுக.

இந்தியாவின் சிகரஜோதி
COMPOUNDED ASAFOETIDA
LG
கூட்டுப் பெருங்காயம்
குடந்தை கோயில்
உங்கள் நாவே நற்சான்று
லால்ஜி கோதுஜி கும்பகோணம்

அமுத வாக்கு
"நல்லதுந் தீயதுஞ் செய்திடும் சக்தி
நலத்தை நமக்கி ழைப்பாள்;
அல்லது நீங்கும்" என்றே யுலகேழும்
அறைந்திடுவாய், முரசே!

அசோகா பாக்கு
No. 1506 ASOKA நெ. 1506

சூட்டிங், ஷர்ட்டிங் ரகங்களும் எங்களிடம் பார்க்கத் தகுந்தவை எல்லாவிதமான ஜவுளிகளும் கிடைக்கும்
பி. ரா. நாராயணசாமி அய்யர்
ஜவுளி வியாபாரம்
பெரியகடை வீதி திருச்சிராப்பள்ளி 8.
பிராஞ்சு: பான்ஸி ஹால், சைனாபஜார் திருச்சி.
மில் ஜவுளிகள் எங்களிடம் சில்லரை வியாபாரிகளுக்கு மொத்தமாக கிடைக்கும்.

சிவாஜி ஆண்டுக்கட்டணம் தனிநபர்க்கு 5 - நிறுவனங்களுக்கு 10



ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

ஓலை 28 | 17—3—1963 | வாரம் 19

# விளம்பர ஆதரவு

பத்திரிகைகளும் சஞ்சிகைகளுமே நவீன உலகின் கல்வி, கலையறிவுக்கு ஏற்ற சாதனங்கள். ஒரு நாட்டின் கலாசாரப் பண்பாட்டுச் சிறப்பை அறிந்து கொள்ள வேண்டுமானல் அந்த நாட்டின் ஏடுகளையே அளவுகோலாகக் கொள்ள வேண்டும்.

இந்தியாவில் பத்திரிகைத் துறையின் வயது ஒரு நூற்றுண்டைத் தாண்டிவிட்ட போதிலும் 50 ஆண்டுகள் வாழ்ந்து முடித்து அதற்கு மேலும் தொடர்ந்து நடைபெறும் ஏடுகளின் எண்ணிக்கையை விரல் விட்டுத்தான் எண்ண வேண்டும். தமிழகத்தில் 25 ஆண்டுகளைத் தாண்டியுள்ள ஏடுகளையும் எண்ணித்தான் பார்க்க வேண்டும். இன்று கடைகளில் தொங்கும் நூற்றுக்கணக்கான ஏடுகள் வண்ணப் பொலிவுடன் திகழ்ந்த போதிலும் இவற்றில் எத்தனை ஏடுகள் 25 ஆண்டுகள்—வேண்டாம், ஒரு பத்தாண்டு காலத்தையாவது தாண்டி நிலைபெறுமென்பதைச் சொல்ல முடியாது. ஆனல் கடந்த அரை நூற்றுண்டில் தமிழகத்தில் தோன்றி, சில காலம் நடந்து, அதைத் தொடங்கியவர்களின செல்வத்தையும், அரிய காலத்தையும் பறித்துக் கொண்டு மறைந்துபோன ஏடுகளின் எண்ணிக்கையோ ஒரு இரண்டாயிரத்துக்குக் குறையாது என்பதைப் புரிந்துகொண்டால், நீடித்து ஒரு ஏடு வெளிவருவது எத்துணைப் பெரிய சாகஸம் என்பது விளங்கும்.

ஒரு இதழ் விற்பனையாகும் ஒரு சில காசுகள்தான் அதன் அடக்க விலையாக இருக்குமென்று யாரும் எண்ணமாட்டார்கள். சுமார் 10 காசுக்கு விற்கும் ஒரு ஏட்டின் அடக்கவிலை 25 முதல் 50 காசுகள்கூட இருக்கும். எனவே அடக்க விலைக்குக் குறைவாக ஒரு ஏட்டின் இதழை விற்க வேண்டுமானல் அந்த நஷ்டத்தை விளம்பர வருமானத்தில் இருந்துதான் சரிக்கட்டவேண்டும்.

நமது மத்திய சர்க்காரின் இந்த ஆண்டு வரிக் கொள்கை சமூகத்தின் பற்பல துறையிலும் வரிப் பளுவைச் சுமத்தியிருப்பது போன்றே பத்திரிகைகளின் விளம்பர வருமானத்திலும் கை வைத்திருக்கிறது.

வர்த்தக ஸ்தாபனங்கள் தங்கள் பொருளை ஏடுகளில் விளம்பரம் செய்யும் செலவை, இதுவரை வருமான வரி இலாகாவினர் அனுமதித்து வந்துள்ளார்கள். வருமான வரியைக் குறைப்பதற்காகவே இத்தகைய விளம்பரச் செலவினங்களை வர்த்தக ஸ்தாபனங்கள் அதிகரித்து விடுகின்றன என்ற கருத்துடன் இவ்வாண்டில் ஒரு நிபந்தனை விதித்திருக்கிருர்கள். விளம்பர வகையில் ஒரு ஸ்தாபனம் செலவிடும் தொகை முழுவதையும் வருமான வரி அதிகாரி ஏற்றுக் கொள்ளாமல் தமது உசிதப்படி ஒரு அளவை மட்டும் அங்கீகரித்து பாக்கிக்கு வரி விதிக்க உரிமை தரப்பட்டிருக்கிறது.

உண்மையில் இந்தக் கட்டுப்பாடு நாட்டின் கல்வி, கலாசார வளர்ச்சியின் மீது விதிக்கும் பயங்கரமான தண்டனை யென்றும், பத்திரிகைகளுக்கு அதுவும் சிறிய பத்திரிகைகளுக்கு விழுந்துள்ள பலமான அடியென்றே கூற வேண்டும்.

விளம்பரச் செலவினம் வருமான வரி அதிகாரியின் யுகதானுசாரத் தீர்ப்புக்கு உள்ளாகி விடுவதால் இனி வர்த்தகஸ்தாபனங்கள் தங்கள் தங்கள் விளம்பரச் செலவை மட்டுப் படுத்திக் கொள்ள வேண்டி வரும். அந்தத் தொகையும் தினசரி போன்ற பெரிய வெளியீடுகளுக்கென்று ஒதுக்கப் பட்டு விட்டால் சிறிய பத்திரிகைகள் பெரிதும் பாதிக்கப் படும்.

வளர்ந்துவரும் புதிய பாரதத்தில் கல்வி கலாசார வளர்ச்சிக்கு ஊக்கம் கொடுத்து மான்ய உதவிகளையும் வழங்கி வரும் மத்திய அரசாங்கத்தார், தங்கள் புதிய கொள்கையால், நாட்டில் நற்பணி புரிந்து வரும் பற்பல சிறிய ஏடுகளுக்குப் பெருந் தீங்கு சூழ்ந்திருக்கிருர்கள். சிறிய ஏடுகளுக்கு அரசாங்க விளம்பரங்களைப் பரவலாக வழங்கி ஆதரிக்க வேண்டுமென்ற நல்ல கொள்கையுடன் இயங்கிவரும் அரசாங்கம், அந்த ஏடுகளின் இதர விளம்பர வருமானத்தில் வெட்டுப் பிரேரணை கொண்டு வந்திருப்பது சிறிதும் சிந்தனையற்ற செயலாகும். தங்கள் கொள்கையை மீண்டும் சிந்தித்து விளம்பரச் செலவில் கட்டுப்பாடு விதிக்காமல் அனுமதிக்க வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்ளுகிறேம். சகோதர ஏடுகள் இத்துறையில் ஒன்று பட்டுத் தங்கள் நிலையை அரசாங்கம் உணருமாறு செய்ய வேண்டியது அவசரமும் அவசியமும் ஆகும்.

★

# கண்ணேட்டம்

—ரா. நா.

கைத்தறி விழா சென்னை நகரிலும் பிற இடங்களிலும் நடைபெற்று வருகிறது. தலைநகரில நடைபெறும் வைபவத்திற்கு கைத்தறிச் சங்கத் தலைவர் திரு. நாச்சிமுத்து அவர்கள் சிறப்பான ஏற்பாடுகள் செய்திருக்கிருர். மக்கள் மனதைக் கவரும் பேச்சாளர்களை தினசரி அழைத்து கைத்தறி பற்றிய பிரசாரம் செவ்வனே நடக்க ஏற்பாடு செய்துள்ளார்.

இப்படி அழைக்கப்பட்ட பிரமுகர்களில் திருவாளர்கள் செங்கல்வராயன், திரு லோக சீதாராம், பெரியார் சொற்பொழிவுகள் குறிப்பிடத் தக்கவை. இம்மூவரிலும் திருலோக சீதாராமின் பிரசங்கம் தான் பயனுள்ள முறையில் அமைந்திருந்தது. கைத்தறி நெசவாளர்கள் கஷ்டப்பட்டுக் கொண்டே இருக்கின்றனர் என்பதைக் குறிப்பிட்டுவிட்டு, அவர்கள் கஷ்டம் இந்தத் தலைமுறையோடு ஒழியட்டும், அவர்களுடைய சந்ததியார்களாவது சுகமாக வாழ வகை செய்யவேண்டும் எனக் கூறிய திரு. செங்கல்வராயன் நெசவாளர்கள் குழந்தைகளுக்கு வேறு பிழைப்புக்கான கல்வி கற்பிக்க வேண்டும் எனயோசனை கூறினர். அவர் யோசனையை ஏற்று நடந்தால் உலகப் புகழ்பெற்ற இந்திய கைத்தறித் தொழிலே ஒழிந்து மறைந்துவிடும் என்பதைப் பற்றி அவர் எண்ணிப் பார்க்கவில்லை. நெசவாளர் கைவண்ணம் நீடித்திருக்க வேண்டுமே என அவர் சிந்திக்கவில்லை.

கைத்தறியை ஏன் கட்டிக்கொண்டு அழவேண்டும், இந்தத் தொழிலேயே மூட்டைகட்டி வைத்து விட்டு நெசவாளர்களுக்கு கூட்டுறவு ஆலை அமைத்துக் கொடுத்து விடலாம் என பெரியார் ஈ. வெ. ரா. யோசனை கூறினர். இவரும் நம் நாட்டு நெசவுத் தொழில் என்கிற கலை மறைந்து விடுமே என்பதை நினைக்கவில்லை. மேலும் ஆலைகள் அமைத்தால் தற்போது கைத்தறி நெசவில் ஈடுபட்டுள்ள லட்சோப லட்சம் மக்களில் ஒரு சிலரே வேலை வாய்ப்பும் பெற முடியும் என்பதையும் அவர்கள் யோசித்துப்பார்க்கவில்லை. கடைசியில் கைத்தறிக்கென சில ரகங்களை ஒதுக்கிவிட்டு, அவைகளை ஆலைகள் தயாரிக்காமல் தடை செய்ய வேண்டும் எனக் கூறினர். இது நல்ல யோசனை ஆனல் புதிதல்ல ஏற்கனவே பிரகாசம் முதலமைச்சராயிருந்தபோது வெளியிட்ட கருத்துத்தான்.

திருலோக சீதாராமன் பிரசங்கத்தில் கைத்தறிக்கு தள்ளுபடி அளிப்பது நெசவாளர்களுக்கு கொடுக்கும் பிச்சைக் காசல்ல, துணி ஆலைகளிலிருந்து வசூலிக்கும் வரிப் பணத்திலிருந்து தான் இந்தச் சலுகை அளிக்கிருர்கள் எனக் கூறி நெசவாளர்களின் கண்யத்தை உயர்த்தினர். இந்தத் தள்ளுபடியை ஆண்டு பூராவுக்கும் அளித்தால், அல்லது ஆலைகள் நூலை எந்த விலையில் எடுத்துக்கொள்கின்றனவோ அந்த விலைக்கே நெசவாளிகளுக்கும் அளித்தால் கைத்தறித் துணி விற்பனையாகாமல் தேங்கிவிடாது என சிறப்பான முறையில் எடுத்துரைத்தார்.

★

மத்திய அரசாங்க அமைச்சர்களுக்கு தண்ணீர், மின்சாரம் முதலியவற்றிற்கான செலவுகளையும், மேஜை நாற்காலி முதலியனவும் அரசினரே கொடுக்கின்றனர். இவைகளில் தண்ணீருக்கும் மின்சாரத்திற்கு ஒவ்வொரு அமைச்சர் இல்லத்திற்கும் மாதம் ஒன்றிற்கு ரூபாய் 1,000 செலவாகிறது. இதை மாதம் ஒன்றிற்கு ரூ. 250/–க்கு குறைத்துக்கொள்ளவேண்டும் என்று ஆட்சியினர் கேட்டுக்கொண்டனர். இதற்கு மந்திரிகள் சம்மதிக்கவில்லை என 'டெக்கான் ஹெரால்டு'' வெளியிட்டிருந்த செய்தியைப் பற்றி குறிப்பிட்டிருந்தேன். உள்நாட்டு இலாகா அமைச்சர் திரு லால்பகதூர் சாஸ்திரி இன்னும் 6 மாத காலத்திற்கு தண்ணீர், மின்சாரம் இரண்டிற்கும் ஆகும் செலவு முழுவதையும் தம் சொந்தச்செலவிலேயே ஈடு செய்வதாகத் தெரிவித்துள்ளார். திரு சாஸ்திரியார் காட்டிய நல் வழியைப் பிறரும் பின்பற்றுவார்கள் என எதிர்பார்க்கலாமா?

★

சமீபத்தில் திரு. சாஸ்திரி நேபாளம் சென்று அங்கே அந்நாட்டு மன்னரையும் மந்திரிகளையும் கண்டு பேசிவிட்டு வந்தார். இந்த விஜயத்தின் விளைவாக இருநாடுகளுக்குள்ளும் சுமுகமான உறவு ஏற்படும் என சாஸ்திரி எதிர்பார்க்கிருர். அவரது அழைப்பிற்கிணங்கி நேபாள மன்னர் மகேந்திரர் இந்தியாவுக்கு விஜயம் செய்ய இசைந்திருக்கிருர். இனியாவது சீனவிற்கு ஒத்து ஊதும் பணியை நேபாளம் கைவிடுமானல் அதனல் இரு நாடுகளுக்கும் நலன் கிட்டும். ★

# ஜி. டி. நாயுடுவின் நன்கொடை...

...யும் தமிழகம் மட்டுமின்றி நாடு முழுவதுமறியும். ஜர்மனி போன்ற வெளிநாட்டு மாணவர்களும் இந்தப் பயிற்சிக் கென்றே வந்து படித்துப் பயன் பெற்றுள்ளார்கள். நமது நாட்டிலும் அமைச்சர்கள், பல்கலைத் துணை வேந்தர்கள், பேராசிரியர்களுக்கும் இது தெரியும். என்ருலும் இந்த முறையைப் பின்பற்றுவதில் இன்னமும் அவர்கள் தயங்கி நிற்பதுதான் வேடிக்கை.

சென்றவாரம் கேரள கவர்னர் வி. வி. கிரி அவர்கள் தலைமையில் இவரது மாளிகையில் நடைபெற்ற விழாவில் முதலமைச்சர் காமராஜரிடம் இரண்டரை லட்சம் ரூபாய் ரொக்கம் பாதுகாப்பு நிதிக்கு திருவாளர் நாயுடு நன்கொடை வழங்கினர். பிரசித்தி பெற்ற இவரது தயாரிப்பான க்ஷவர பிளேடுகள் பத்து லட்சம் ராணுவ வீரர்களின் உபயோகத்திற்கென்று வழங்கினர்.

நமது ராஜ்யத்திலேயே தனியார் ஒருவர் வழங்கியுள்ள மாபெரும் தொகை என்று இதனை முதலமைச்சர் மகிழ்ந்து பாராட்டினர். பாதுகாப்புக்கான தளவாடங்களை உற்பத்தி செய்யும் துறையில் அதிக கவனம் செலுத்துவது இச்சமயம் மிகவும் அவசியமென்றும் முதலமைச்சர் கேட்டுக் கொண்டார். வரிச் சுமையைப் பற்றி முதலமைச்சர் குறிப்பிடும் போது, நாட்டின் சுதந்திரம் ஆபத்தில் இருக்கும் இந்நிலையில் ஏழை பணக்காரர் யாவரும் ராணுவச் செலவை ஏற்க வேண்டியதுதான் தேசபக்தி என்பதையும் கூறினர்.

தலைமை வகித்த வி. வி. கிரி, நாயுடு அவர்களின் கோடைகாலப் பயிற்சி வகுப்புக்களின் அமைப்பு, பயன் ஆகியவை பற்றிப் பெரிதும் பாராட்டினர்.

தொடக்கத்தில் வரவேற்புரை நிகழ்த்திய நாயுடு அவர்கள் வெறும் ஏட்டுப் படிப்பு சொல்லித்தரும் கலைக் கல்லூரிகளைக் காட்டிலும் நாட்டில் இன்று ஏற்பட்டுள்ள நெருக்கடி நிலையைச் சமாளிப்பதற்கும், எதிர்காலத்தில் ஏனைய உலக நாடுகளுடன் நமது மக்கள் சம அந்தஸ்தில் ஈடு கொடுத்து நிற்கவும், இப்பொழுதிலிருந்தே மாணவர்களுக்கு தொழில் விஞ்ஞானக் கல்வியை அதிகம் கற்பிக்க வேண்டுமென்பதை வலியுறுத்திக் கூறினர்.

ஆறே வாரங்களில் சாதாரண ஒரு மாணவனைத் தொழிலூக்கம் நிறைந்த திறமைசாலியாக்கிவிட முடியுமென்பதை கோடைக் காலப் பயிற்சி வகுப்புக்களின் மூலம் தாம் தொடர்ந்து பல ஆண்டுகளாக நிரூபித்து வந்துள்ளதை நினைவூட்டினர். ராஜ்ய அரசாங்கங்கள் பலவும், வேறு தனிப்பட்ட ஸ்தாபனங்களும் இந்த முறையைப் பின்பற்ற நன்மை பயக்குமென்பதை அறிந்திருந்த போதிலும், இந்த முயற்சியை மேற்கொள்ளாமல் இருந்து வருகின்றன என்றும் குறிப்பிட்டார்.

திருவாளர் நாயுடு அவர்களுக்கு வருமான வரி இலாகாவுடன் இருந்த பதினைந்து வருட விவகாரம் முற்றுப் பெற்று அரசாங்கம் இவருடன் சமரசமாகப் போய் விட்டது. சுமார் 1 கோடிக்கு மேலாக வருமானவரி பாக்கி இவரிடமிருந்து வசூலிக்க வேண்டுமென்று உரிமை கொண்டாடி வந்த வருமான வரி இலாகா சுமார் 7 லட்சம் கொடுத்தால் போதுமென்ற ஏற்பாட்டை இவருடன் செய்து கொண்டு விட்டது. இப்பொழுது அவை யாவும் முடிந்து நாயுடு பற்பல தொழிற் சாலைகளைத் தோற்றுவித்து பழையபடி ஆக்க வேலைகளில் ஈடுபட்டிருப்பது நமது நாட்டின் பொது நன்மையாக அமைகிறது. இப்பொழுது இரண்டரைலட்சம் தேசீயப் பாதுகாப்பு நிதிக்கு அவர் வழங்கியுள்ள நன்கொடை அவரது தாராள மனப்பான்மைக்கும் தேசபக்திக்கும் ஒரு எடுத்துக்காட்டாகும். ●●

பாகவதக் கதை

# கண்ணனுக்குக் கல்யாணம்

( எடுத்து எழுதியவர் ) — சி. என். நாச்சியப்பன்.

★

விதற்ப தேசத்தில் தர்ம சிந்தையுள்ள பீஷ்மகன் என்கிற அரசன் ஆட்சி செய்துவந்தான். அவனுக்கு உருக்குமி, உருக்குமீரதன், உருக்குமீபாகு, உருக்குமீகேசி, உருக்குமீநேத்திரன் என்று ஐந்து குமாரர்களும், மகாலெட்சுமியினுடைய அம்சமாய், சகல நற்குணங்களும், ஈடு இணையற்ற எழிலும் வாய்க்கப் பெற்ற உருக்குமணிதேவி (ருக்மணி) என்று ஒரு பெண்ணும் இருந்தார்கள்.

பீஷ்மகனின் அரசவைக்கு வரும் பெரியவர்களும், ரிஷிகளும், முனிவர்களும் கண்ணனின் பெருமையைப் பேசினர். இதைக் கேட்டாள் அவையில் இருந்த ஆயணங்கு ருக்மணி. அவள் மனம் கண்ணனிடம் லயித்தது. அவள் இதயம் கண்ணனை எண்ணித் தவித்தது. கண்ணனைக் காணாமலே அவனிடம் அன்பு கொண்டாள். அவனை மணக்க முடிவுசெய்தாள். இரவும் பகலும் கண்ணன் திருநாமத்தைஉச்சரித்தாள் உண்ணும் உணவிலும் கண்ணனைக் கண்டாள். பருகும் நீரிலும் கண்ணனைக் கண்டாள். பண்ணும் பூஜையிலும் கண்ணனைக் கண்டாள். பார் முழுதும் கண்ணனையே கண்டாள்.

கண்ணன் அன்றிக் கணவன் இல்லை; கண்ணன் இன்றிக் கடவுளும் இல்லை. கண்ணன் இன்றி வாழ்வுமில்லை என்று எண்ணிக் கொண்டாள். எந்த நேரமும் 'கண்ணா, கண்ணா!' என்று பிதற்றி நின்றாள். ருக்மணிக்குக் கண்ணன் மேல் ஏற்பட்ட காதல்; கனிந்து நின்றது. காரிகை நெஞ்சம் கரைந்து நின்றாள்; உள்ளம் உருகி நின்றாள்; உணர்ச்சி பெருகி நின்றாள். உண்மை வடிவை அடைய உள்ளம் துடித்து நின்றாள்.

இதை ஒருவாறு உணர்ந்தான் பீஷ்மகன். கண்ணனே தன் மகளுக்கு உகந்த மணாளன் என்று எண்ணினான். இருவருக்கும் திருமணம் செய்ய முடிவு செய்தான்.

கண்ணபிரானும் ருக்மணியின் எழிலையும் குணத்தையும் கேள்வியுற்று அவள் மேல் காதல் கொண்டான். தனக்கு ஏற்ற தளிர்க்கொடி ருக்மணியே என்று மகிழ்ந்து மண நாளுக்கு உரிய தருணம் பார்த்திருந்தான்.

ருக்மணியின் மூத்த அண்ணன் உருக்குமி இதையெல்லாம் உணர்ந்து கொண்டான். உருக்குமிக்குக் கண்ணன் கடும் பகைவன் ஆவான். பைங்கிளியை வளர்த்துப் பகைவனிடம் ஒப்படைக்கச் சம்மதிப்பானா உருக்குமி? தன் அன்புத் தோழன் சேதி நாட்டு அரசன் சிசுபாலனுக்கே தன் தங்கையைத் தாரை வார்த்துக் கொடுக்க விரும்பினான் உருக்குமி.

இந்த இக்கட்டான சூழ்நிலையை அறிந்த ருக்மணி, இதிலிருந்து தன்னைக் காத்துக்கொள்ள நினைத்தாள். ஓர் அந்தணனை அழைத்து, அவனிடம் விவரத்தைச் சொல்லிக் கண்ணனுக்கு ஒரு கடிதமும் கொடுத்தனுப்பினாள். அந்த அந்தணன் துவாரகை சென்று அந்தப்புரத்தில் கண்ணனைச் சந்தித்து வந்த காரியத்தைச் சொன்னான். கண்ணனும் களிப்புக் கொண்டான். கடிதத்தைக் கொடுத்தான் அந்தணன். பிரித்துப் படித்தான் பிரகலாதனின் தலைவன்.

“இகத்திலும், பரத்திலும் இன்பத்தை அளிக்க வல்ல பிரபுவே! விதற்ப தேசத்து அரசன் பீஷ்மகனின் குமாரி ருக்மணியின் மனமுவந்த வணக்கங்கள்.

“சூரியனைக் கட்டை விரலால் மறைக்க முடியாததைப் போல, பொங்கிவரும் கடல் அலையைக் குறுந்தடியால் அடக்க இயலாததைப் போல, தங்களது கருணை நிறைந்த குணத்தையும் பொற்புடைய புகழையும் அற்பர்களால் மறைக்க இயலாது. கதிரவனால் சகல ஜீவராசிகளும் பயனடைவதைப் போல, தங்களது கருணையால் உயிரினங்கள் உய்கின்றன. ரிஷிகளாலும், முனிவர்களாலும் தங்களது புகழ் உலகெங்கும் பரவிக் கிடக்கிறது. நல்லோர் உள்ளமெல்லாம் நிறைந்திருக்கிறது. இந்தப்பாக்கியத்தை அடைந்த அடியவர்களில் அடியாளும் ஒருத்தி.

‘கொடி கொழுகொம்பைச் சுற்றிப் படர முயல்வதில் வியப்பென்ன? தடாகத்துத் தாமரை சூரியனின் வரவை நோக்கி மலர்வது இயற்கை தானே? அல்லி மலர்க் கூட்டம் பூரணச் சந்திரனின் பொலிவு காணாமல் கூம்பியிருந்தால் குற்றம் என்று யாரும் கூறுவார்களோ?

“சுவாமி! இவையெல்லாம் நிகழ்ந்தாலும், நிகழாவிட்டாலும் குற்றமில்லை. ஆனால் சிங்கத்திற்கு ஏற்பட்ட உணவைச் சிறு நரி புசிக்க விழைந்தால் அது மாபெரும் குற்றம் அல்லவா? ஆம் என்னைச் சிசுபாலனுக்கு உரியவளாக்க உருக்குமி முனைகிறார்.

“இந்தக்கொடுமையினின்றும் என்னைக் காப்பாற்றிக் கரை சேர்க்க மாட்டீர்களா? நம்பினோர் கெடுவதில்லை; என்பது வேதமாயிற்றே. தாங்கள் வேதத்தின் முதல்வராயிற்றே; முதல்வரை நம்பியிருக்கும் அடியவளாயிற்றே நான்! வெல்வதும் பாவமோ? வேதம் பொய்க்குமோ? இல்லையோ அறம்? என இரங்கி ஏங்குகின்றேன்.

“அறத்தின் தலைவனே! முடிவிலாப் பொருளே! மோகன வடிவே! நான் அந்தப்புரத்தை விட்டு கௌரி பூஜை செய்வதற்காக வெளியே வருவேன். அப்பொழுது தாங்கள் என்னைச் சந்தித்தால்.....இல்லை இல்லை..... எவ்வளவு தூரத்திற்கு அப்பாலிருந்தாலும் தன் கூரிய பார்வையால் உணவைக்கண்டு கொண்ட பருந்து என்ன செய்கிறது என்று நான் சொல்லித்தானா தெரிய வேண்டும்?

“சுவாமி! அடியாளை ஏற்றுக்கொள்ளுங்கள். அபயம் அளியுங்கள். ஆபத்திலிருந்து காப்பாற்றுங்கள். அடியாள் வணக்கம்.—”

கடிதத்தைப் படித்து முடித்தான் கண்ணன்.

“அந்தணரே! ருக்மணியைப்பற்றி எனக்கும் நிறையத் தெரியும். மலருக்கு மட்டும்தானா வண்டைப்பற்றிய சிந்தனை உண்டு? எத்தனை அரசர்கள் எதிர்த்தாலும் சரி, இப்பொழுதே சென்று காரிகையைக் காப்பாற்றுகிறேன்!” என்று கூறினான்.

உடனே தனது சாரதி தாருகனை அழைத்துத் தேரைக் கொண்டுவர உத்தரவிட்டான். சைனியம், சுக்கிரீவம், மேக புஷ்பம், வலாஹம் என்ற நான்கு நல்ல குதிரைகள் பூட்டிய தேர் பறந்து வந்து நின்றது. கண்ணனும், அந்தணனும் தேரில் ஏறிக் கொண்டனர். தேர் துவாரகையை விட்டு, வில்லிலிருந்து புறப்பட்ட அம்பு போல விதற்ப தேசத்தை நோக்கிப் புறப்பட்டது.

உருக்குமி தன் தங்கை ருக்மணியை சிசுபாலனுக்கே மணம் செய்து கொடுக்கவேண்டும் என்று பீஷ்மகனிடம் பிடிவாதம் செய்தான். தன் மகனின் வார்த்தையை மறுக்க இயலாமல் பீஷ்மகனும் ஒப்புக் கொண்டான். சிசுபாலனும் விதற்ப தேசம் வந்து சேர்ந்தான். அவனுடன் சாலவன் ஜராசந்தன் இவாள் முதலிய அரசர்களும் வந்தனர். தேசமெங்கும் வரவேற்பு வளைவுகளும், வீதியெங்கும் மகர தோரணங்களும், கோலாகலங்களும், கொண்டாட்டங்களுமாகக் காட்சி அளித்தது.

பீஷ்மகன் சிசுபாலனை அர்கியபாத்திய முதலியவற்றால் பூஜித்து, தனது அரண்மனை விடுதியிலேயே அமர்த்திக் கொண்டான்.

இந்த நெருக்கடி நிலைமையை உணர்ந்த ருக்மணி துடியாய்த் துடித்தாள்; கண்ணீர் வடித்தாள்; “கண்ணா, கண்ணா” என்று பிதற்றினாள், “கார்மேக வண்ணா! என்னைக் காத்தருள மாட்டாயா?” என்று கதறினாள்; பதறினாள் பாவை. அந்தணன் என்ன ஆனானோ? கடிதம் என்ன ஆயிற்றோ? கண்ணன் என்ன சொன்னானோ? என்று கருதிக் கருதிக் கருத்தழிந்தாள். நினைந்து, நினைந்து நெஞ்சம் நெகிழ்ந்தாள். எண்ணி எண்ணி ஏங்கி நின்றாள். அழுது, அழுது அயர்ந்து போனாள். தலைவன் பெயரைச் சொல்லிச் சொல்லிச் சோர்ந்து போனாள். மனம் மறுகி, மறுகி மன்றாடி நின்றாள். உள்ளம் உருகி, உருகி உருக்குலைந்தாள்.

இந்த நிலையில் கண்ணனும் விதற்ப தேசம் வந்தடைந்தான். “கண்ணன் என்ன ஆனானோ” என்று கருதி, பலராமனும் யாதவப் படையுடன் விதற்ப தேசத்தை அடைந்தான்.

ஓடோடியும் சென்று ருக்மணியைச் சந்தித்தான் அந்தணன். நடந்ததைச் சொன்னான். நடக்க இருப்பதைச் சொன்னான். நடந்துகொண்டிருப்பதைச் சொன்னான். நடந்துகொண்டிருப்பதைச் சொன்னாள் நாரீமணி. “முக்காலத்திற்கும் முதல்வன் வந்துவிட்டான்; முடிவு அவன் கையில் இருக்கிறது. கவலைப் படாதே!” என்று ருக்மணியைத் தேற்றினான் அந்தணன்.

அந்தணனுடைய வார்த்தைகளில் அளவிலா ஆனந்தமடைந்த ருக்மணி அவனுக்கு என்ன கைம்மாறு செய்வதென்று தோன்றாமல் நின்றாள் நம்முடைய திருப்பார்வை பட்டவர்கள் செல்வ வளத்தில் செழிப்புற்று வாழ்வார்கள் ஆகையால் நாம் இவரைப் பூஜித்தால் இவருக்குச் சகல செல்வங்களும் வந்தடையும் என்று கருதி, அந்தப் பிராமணனை வலம் வந்து பூமியில் விழுந்து வணங்கி நின்றாள்.

ஸ்ரீபலராம கிருஷ்ணர்கள் விதற்பதேசம் வந்தடைந்ததைக் கேள்வியுற்ற பீஷ்மகன் அவர்களைக் கண்டு களிப்புக் கொண்டு; கண்ணனை அர்க்கிய பாத்திய முதலியவற்றால் பூஜித்து, அரண்மனையில் தனி இடத்தில் தங்க வசதி செய்து கொடுத்தான். யாதவர்களும் கண்ணனுடனும் பலராமனுடனும் தங்கினர்.

கண்ணனைக் கண்ட விதற்ப தேசத்துப் பொதுமக்கள் அனைவரும் அவன் எழிலைப் பாராட்டி, புகழைப் பேசி நின்றனர். “இந்த இளஞ் சிங்கமான கண்ணன் மயில் போன்ற சாயலை உடைய ருக்மணியை மணம் புரிந்து கொண்டால் எவ்வளவு பொருத்தமாக இருக்கும்? இருவரும் திருமணக் கோலத்தில் இருக்கும் காட்சியைக் காண நம் கண்கள் தவம் செய்திருக்கிறதோ; இல்லையோ?” என்று பேசி கொண்டனர்.

ருக்மணி தேவியானவள் கௌரி பூஜைக்காக அந்தப்புரத்தை விட்டு கோவிலுக்குப் புறப்பட்டாள். கோவிலில் சென்று, “பார்வதி தேவியே! என தன்பன் கண்ணனே எனக்குக் கணவனாக வேண்டும்!” என்று பிரார்த்தித்தாள். கோவிலிலிருந்து தன் தோழியின் கரத்தைப் பற்றியபடி வெளியே வந்தாள். வனிதை வந்ததைக் கண்ட வாலிபர் பலர் வழி தவறி நடந்தனர். விழி தவறி விழுந்து விடுமோ என்று அஞ்சும் வண்ணம் நோக்கினர். மூர்ச்சையுற்று விழுந்தவர் பலர்; முழு மதியைக் காணக் கூட்டத்தில் முண்டிக் கொண்டு முன் வந்தவர் பலர். “இவள் நமக்குக் கிடைக்க மாட்டாளா?” என்று முணுமுணுத்தவர் சிலர். என்ன செய்வது என்று பெருமூச்சு விட்டபடி ஏங்கியவர் சிலர்.

இவ்வளவு கண்களுக்கும் இடையே காரிகை கண்ணனையே நினைத்தபடி, தென்றலில் ஆடும் பூங்கொடி போல, பாதங்கள் பூமியில் பாவியும் பாவாமலும் நடை பயின்று வந்தாள். அவள் சிந்தனையை உணர்ந்த கண்ணன் தேரிலேறித் தெருவில் வந்தான். தேடக் கிடைக்காத தெள்ளமுதைக் கண்ணாறக் கண்டான். கண்டாள்.

பவழம் போன்ற உதடுகளும், வலம்புரிச் சங்கம் போன்ற கழுத்தும், சந்திர பிம்பம் போன்ற திரு முகமும், இருண்ட கார்மேகம் போன்ற சுருளான கூந்தலும், கலசங்களை ஒத்த கொங்கைகளும், நெய்தல் புஷ்பங்களைப் போன்ற விழி மலர்களும், வில் போன்ற புருவங்களும், சிங்கத்தின் இடை போன்ற இடையும், மணற்குன்று போன்ற புட்டமும், மாதளம் விரை போன்ற பல் வரிசைகளும், எள்ளுப் பூப் போன்ற மூக்கும், தாமரை போன்ற கால்களின் ஒலிகளும், கற்பகக் கொடி போன்ற கைகளும், கண்ணாடி போன்ற கன்னங்களும், குளுமை நிறைந்த கடைக் கண் பார்வையும் மின்னக் காட்சி அளித்தாள் ருக்மணி.

கண்ணன் மனம் அவன் வயம் இல்லை என்று சொல்லவும் வேண்டுமா? கண்ணனைக் கண்ட காரிகையின் நிலையும் இதுவே. கார்மேகத்தை ஒத்த வண்ணமும், ஆத்மாவை வசப்படுத்தும் மாயப் புன்னகையும், பால் போன்ற முக லாவண்யமும் ருக்மணியை ஈர்த்து இழுத்தன.

காந்தத்தை நெருங்கிய இரும்பு ஒட்டிக் கொள்ள விரையும் வேகத்தில் துடித்தாள் ருக்மணி. என்ன செய்வது என்று அறியாமல் திகைத்தாள். தோழிகள் புடைசூழ, கால்களில் தண்டையின் சதங்கை ஒலி கலீர், கலீர் எனத்தொனிக்க அடிமேல் அடியெடுத்து வைத்து அன்னமென நடந்தாள்.

ருக்மணிக்குத் துணை வந்த படையையும் கடந்து சென்று, தேவியைத் தேரில் ஏற்றிக் கொண்டு விரைந்தான் கண்ணன். கண்டவர் வியந்தனர். படை கண்ணனை நோக்கி நடை போட்டது. யாதவப் படையும் எதிர்த்தது. இரு தரப்பினருக்கும் கடும் போர் நடந்தது. ஜராசந்தன் விதற்ப தேசத்துப் படையை நடத்

(6-ம் பக்கம் பார்க்க)

# கண்ணனுக்கு கல்யாணம்...

( முன் பக்கத் தொடர்ச்சி )

தினன். நிகழ்ச்சியைக் கேள்விப்பட்ட சிசுபாலனும் போரில் புகுந்து கொண்டான். இறுதியாக எல்லோரும் தோற்றுத் திரும்பினர்.

இதையெல்லாம் கேள்வியுற்ற உருக்குமி கடுங்கோபங் கொண்டான். தேரேறிப் புறப்பட்டான். கண்ணனைத் தொடர்ந்து சென்று போரிட்டான். கண்ணன் அவருடைய போர்க் கருவிகளையெல்லாம் சின்னா பின்னப் படுத்தினான். உருக்குமி ஒரு உடைவாளுடன் கண்ணனை வெட்ட ஓடி வந்தான்.

கண்ணன் அந்த வாளையும் துண்டித்து; தன்னுடைய காந்தகமென்கிற கத்தியைக் கையில் ஏந்தி உருக்குமியைக் கொல்ல முனைந்தார். நிலையை உணர்ந்த ருக்மணி பயந்து நடுங்கி, பகவானின் பாதங்களில் விழுந்து, "சுவாமி! ஞானிகளுக்கும், யோகிகளுக்கும் அதிபதியான கருணைக் கடலே! என் சகோதரனைக் கொல்லாது உயிர்ப் பிச்சை அளிக்க வேண்டும்.

உலகில் ஞானமில்லா மூடர்களும், அறிவற்ற பேதைகளும், கருணையற்ற நெஞ்சினரும், ஈவு இரக்கமற்ற இதயத்தினரும், அறத்தை அறியாத பாபிகளும், கடமை மறந்த கசடர்களும் உன் பெருமையை அறிய மாட்டார்கள்; உன் புகழைப் பேசமாட்டார்கள்; உன்னை வணங்கக் கூசுவார்கள்! இந்த வரிசையில் என் அண்ணா முதன்மையானவர். எல்லாம் தெரிந்த தாங்கள் இதை உணரமாட்டீர்களா? தாங்களும் அவனுடன் பகைகொண்டு மாய்க்க எண்ணலாமா? மன்னித்து அருளுங்கள்!" என்று வேண்டினாள்.

ருக்மணியின் வேண்டுகோளுக்கு இணங்கினான் கண்ணன். உருக்குமியைக் கொல்லாது பிடித்து, தேர்க்காலில் கட்டி, அவனது தலைமுடியை விகாரப்படுத்தி விரட்டி விட்டான். அவமானமடைந்த உருக்குமி, கண்ணனைக் கொல்லாமல் நாடு திரும்பக் கூடாதென்று கருதி, புதிதாகப் போஜகூடமென்று ஒரு பட்டணத்தை நிர்மாணித்துக் கொண்டு அதில் வசிக்கலானான்.

கண்ணன் ருக்மணியுடன் துவாரகை வருவதை அறிந்த உக்கிரசேன மன்னன் நகரை அலங்கரிக்கக் கட்டளையிட்டான். துவாரகை தேவருலகம் போல மாறியது. மக்களெல்லாம் கண்ணனை எதிர் கொண்டு வரவேற்றனர். கண்ணனும் அண்ணனுடனும், மனைவியுடனும் அரண்மனை புகுந்தான். முறைப்படி பெரியவர்களின் முன்னிலையில் கண்ணனுக்கும் ருக்மணிக்கும் கல்யாணம் நடந்தது.

கண்ணனும் ருக்மணியும் இல்லற இன்பத்தை இனிது அனுபவித்தனர். வாலிப சுகத்தை நுகர்ந்து மகிழ்ந்தனர். இன்ப உலகத்தை எட்டிப் பிடித்தனர். கனவுலகில் மிதந்தனர். காதல் உலகில் பறந்தனர். காரிகையும் கருக் கொண்டாள். *

அமிர்தாஞ்சனம்
சகல வலிகளுக்கும்
கைகண்ட மருந்து
எங்கும் கிடைக்கும்
அமிர்தாஞ்சனம் லிமிடெட். சென்னை பம்பாய்.

எவரும் விரும்புவது
எங்கும் கிடைப்பது
வின்ஸெண்ட்
கனிச்சுவை பானங்களே.
VINCENT

சினோ பிரைமா கெடியாரம்
உயர்ந்த ரகம் விலை சகாயம்
கண்ணன் & கோ
திருச்சிராப்பள்ளி.

சிறந்த பெயிண்டுகளுக்கு
ஸ்பார்ட்டன்
இம்பீரியல் ட்ரேடிங் கார்ப்பரேஷன்
மேலப்புதூர்........ திருச்சி.1

மோட்டார் பாட்டரிகளுக்கு
இம்பீரியல் டிரேடர்ஸ்
அம்பிகா டவர்ஸ், திருச்சி.2.

# மூளையில் பாதியைத்தான் உபயோகிக்கிறோம் மூளையே ஒரு நினைவுப் பொதிதான்

★

"கொஞ்சமாய் படித்தால் போதும்; அதிகம் படிக்காதீர்கள்" என்று ஓர் ஆசிரியர் சொன்னால் நமக்கு எவ்வளவு வியப்பாயிருக்கும்! ஆனால் மேற்கு ஜெர்மனியின் கெட்டிங்கென் பல்கலைக்கழகத்தை சேர்ந்த உடல் கூறு நிபுணரும், மூளை இயக்கம் பற்றிய ஆராய்ச்சி அறிஞருமான பேராசிரியர் பால் க்ளீஸ் இந்த மாதிரித்தான் சொல்கிறார். தீவிர ஆராய்ச்சிக்குப் பின் அவர் இந்த உறுதியான முடிவுக்கு வந்திருக்கிறார். மூளை பற்றிய ஆராய்ச்சியாளராயிருந்தும், மூளை சம்பந்தமாகக்கூட அதிகமாய்ப் படிக்கவேண்டாம் என்று அவர் வற்புறுத்துகிறார் என்றால் வியப்பாகத்தான் இருக்கும். மனிதனின் நினைவுகள் மூளையில் சில நரம்பு அணுக்களில் அடுக்கு அடுக்காக ஏறுகின்றன.

இந்த அணுக்களின் எண்ணிக்கை மட்டானதுதான் என்பதால், மனித மூளையின் திறனும் மட்டானதுதான். இது காரணமாய், கல்வி சம்பந்தமான மிகத் தீவிரப் பிரச்சினை ஒன்று தோன்றுகிறது. நினைவுச் சக்தி என்னும் அரிய மட்டான திறனில் எவ்வளவு சுமையை ஏற்ற முடியும் என்பதுதான் அந்தப் பிரச்சினை. ஆரம்பப்பள்ளி முதல் கல்லூரி வரையில் ஞாபக சக்திக்குத்தானே அயராத வேலை இருக்கிறது? மனிதனின் நினைவு அறையில் எத்தனை விவரங்களைத் திணிக்க வேண்டியிருக்கிறது!

மனித குலமே, சென்ற சில நூற்றுண்டுகளில் தனது நினைவுத் திறனைப் படிப்படியாக வளர்த்துக் கொண்டிருக்கிறது என்று பேராசிரியர் க்ளீஸ் கூறுகிறார். எழுத்துக்கலையும், அச்சுக்கலையும் ஏற்பட்டதால் புதிய நினைவுக்கூறுகள் மனிதனுக்கு ஒரு நிரந்தர அம்சமாகவே உண்டாகிவிட்டன. எந்த விவரத்தை எங்கே காண முடியும் என்பதைத் தெரிந்துக் கொள்வது தான் மிகவும் முக்கியமானது; இதை ஒவ்வொரு விஞ்ஞானியும், எஞ்சினியரும் அறிவார். ஏனென்றால் பரீட்சைக்காக மனப்பாடம் செய்யும் விவரங்களெல்லாம் நினைவில் தங்குவதில்லையே! ஆனால், வெளியாகும் ஒவ்வொரு புத்தகமும் மாணவனின் சுமையைக் குறைப்பதற்காக அல்லாமல் அதை மேலும் மேலும் அதிகமாக்கவே உபயோகிக்கப்படுகிறது. மனிதனின் ஞாபக சக்தியை மட்டுக்கு மிஞ்சி மதிப்பிடுவது தான் போக்காயிருக்கிறது.

இந்தப் போக்குக்கு ஒரு பரிகாரமாக நமது பேராசிரியர் புரட்சிகரமாக யோசனை சொல்கிறார்: முன் நாளில் மாணவர்கள் கற்ற அளவுக்கு இப்போதைய மாணவர்கள் கற்கவேண்டிய அவசியமேயில்லை என்று அவர் அழுத்தமாய்ச் சொல்லுகிறார். வருங்காலத்தில் பரீட்சை எப்படியிருக்கக்கூடும் என்பதை அவர் கற்பனை செய்து பார்க்கிறார்: மாணவர்கள் தம்முடன் எந்தப் புத்தகத்தை வேண்டுமானாலும் எடுத்துச் செல்லலாம் என்று இருக்குமாம். எந்த விவரத்தை எங்கே பார்த்துக் கண்டுபிடிக்க வேண்டும் என்பதை அவர்கள் ஒரு வகை இரண்டாவது நினைவுத் திறனின் உதவிக் கொண்டு கண்டுபிடித்தால் போதுமாம். இப்படி ஒரு நுட்பத் திறமையை அடிப்படையாய்க் கொண்டு பரீட்சைகள் நடத்தினால், மூளையை ஒரு நினைவுப் பொதியாக்க வேண்டிய அவசியம் ஏற்படாது. அப்போதும் எத்தனையோ விவரங்களை மனப்பாடம் செய்யத்தான் வேண்டியிருக்கும். இருந்தாலும் அது ஒரு பாரமாய் இருக்காது.

நம் வாழ்வின் மூன்றாவது வருஷம் முதலே நினைவு சம்பந்தப்பட்ட ஜீவ அணுக்களின் வலிமை குன்ற ஆரம்பித்து அவை கொஞ்சம் கொஞ்சமாக படிய ஆரம்பிக்கின்றன. இருபதாவது வயதில் மனிதன் அவனுடைய மூளையின் ஜீவ அணுக்களில் பாதியை இழந்துவிடுகிறான். வாழ்வின் இறுதியை எட்டுவதற்குள் - அதாவது 80 வயதை எட்டுவதற்குள் மேலும் 30 சதவிகிதத்தை அவன் இழந்துவிடுகிறான்.

இவ்விதம் மழுங்கும் மூளையில் பாதியைத்தான் மனிதன் உபயோகப்படுத்துகிறான். கல்வி நம்மை "ஒற்றக்கை ஆட்"களாக்கி விடுகிறது: அதாவது நாம் ஒரு கையாலேயே எழுதி, வேலை செய்கிறோம். சாதாரணமாய் வலது கைதான் இதற்குப் பயன்படுகிறது. மூளையின் இயல்பு காரணமாய், அதன் இடது பகுதி - அதாவது மறுபகுதி - வலது பகுதியை விட வேகமாக வளர்ச்சியடைகிறது. அந்தப் பாதியே மேலோங்கி நின்று, முக்கியமான காரியங்களனைத்தையும் செய்கிறது. உதாரணமாக, அதுவே மொழியின்மையாய் விளங்குகிறது. மூளையின் இரண்டு பகுதிகளுக்கும் ஒரே மாதிரி அலுவலும் மதிப்பும்தான் இருக்கிறது என்றாலும், ஒரு பாதி மேலோங்கியிருப்பது உண்மையே; மற்றப் பகுதி தனது பொறுப்புக்களில் தாழ்ந்து விடுகிறது. மூளையில் ஏற்பட்ட பிளவை காரணமாக ஒருசமயம் ஒருவருடைய மூளையின் ஒரு பகுதியை டாக்டர்கள் வெட்டி எடுத்து விட்டார்கள். ஆனால் அதனால் மூளையின் இயக்கம் பாதிக்கப்படவில்லை; மூளையோ மனமோ எவ்வித அதிர்ச்சிக்கும் இலக்காகவில்லை. ஆனால், இவ்வாறு அகற்றப்படும் பகுதி, தாழ்ந்திருக்கும் பகுதியாகத்தான் இருக்க வேண்டும்; அப்படி இருந்தால் தான் மூளையின் இயக்கம் சரியாயிருக்கும். உயர்வான பாதியை எடுத்து விட்டால், அதன் விளைவுகள் நாசகரமாயிருக்கும்.

இருந்தாலும், தாழ்ந்த பாதியை, போதிய பயிற்சி மூலம், உயர்வான பாதியின் பொறுப்புக்களை ஏற்கச்செய்ய முடியும். போரின்போது மூளையில் அடிபட்டு, பேசும் சக்தியை இழந்துவிட்ட பலர், பிற்பாடு, மூளையின் மறுபாதியைப் பயில்வித்து தமது பேசும் சக்தியை மீட்டுக் கொண்டு விட்டார்கள். புகழ்மிக்க ஸ்விஸ் உயிரியல் நிபுணர் பேராசிரியர் ஃபாரெல், ஒருசமயம் மூளையின் உயர் பாதிக்கு ஏற்பட்ட காயத்தால், பக்கவாதத்துக்கு இலக்கானார். தமது நிலைமையை அவர் முற்றிலும் உணர்ந்து, மூளையின் மறுபாதியை சீரான பயிற்சி மூலம் வழிக்குக் கொண்டு வந்து, தமது உடல், மனத் திறன் முழுவதையும் மீட்டுக் கொண்டுவிட்டார்.

உண்மையில், மூளையின் தாழ்வான பகுதியிருக்கிறதே, அதை ஒரு ரிஸர்வாகவே கொள்ளலாம் என்று பேராசிரியர் க்ளீஸ் சொல்கிறார். பள்ளிக் கூடக் கல்வியின்போது மூளையின் ஒரு பாதிதான் வளர்ச்சியடைகிறது. ஆசிரியர் கேட்ட கேள்விக்கு விரைவாகப் பதிலளிக்க வேண்டுமானால், மூளையின் ஒரு பகுதிதான் அதற்கு ஈடுகொடுக்க முடியும். இரண்டு பகுதிகளும் ஒத்துழைப்பதற்கு அதிக அவகாசம் வேண்டும்.

குழந்தைப் பருவத்திலேயே மூளையின் இரு பகுதிகளையும் சீராக மேம்படுத்த ஆரம்பிக்க வேண்டும் என்று பேராசிரியர் க்ளீஸ் கூறுகிறார். அப்படி மேம்படுத்தினால் கலைப் படைப்புத் திறன் ஏற்படும் என்று அவர் சொல்லுகிறார். நாகரிகம் முற்றாத காலத்திய மனிதன் நல்ல கலைஞனாயிருந்தான். அதற்குக் காரணம், அவன் மூளையின் ஒரு பகுதி மேலோங்கியதாயிருக்கவில்லை. எழுதத் தெரியாத சிறு குழந்தை "கைப் பழக்க"த்துக்கு அடிமையாகவில்லை என்பதால், அதற்கு நல்ல கற்பனைத் திறனுடன் ஓவியம் தீட்டத் தெரியும்.

ஒரு கையாலோ, இரண்டு கைகளாலுமோ சுயேச்சையாம் வேலை செய்வதற்குக் குழந்தைகளை அனுமதிக்கும் பள்ளிக்கூடங்களில் இந்தத் திறமையைக் காணலாம். மூளையின் இருபகுதிகளையும் முதிய வயது வரைக்கும் கூட இடைவிடாமல் பயில்விக்க வேண்டும். மூளையின் முழுப் பயனும் அப்போது தான் நமக்குக் கிடைக்கும் என்கிறார் பேராசிரியர் க்ளீஸ். அவருடைய யோசனையைக் காரியத்தில பயன்படுத்திப் பல பரிசோதனைகள் நடத்துவதற்கு அமெரிக்கப் பேராசிரியர் ஒருவர் இப்போது திட்டமிட்டு வருகிறார்.

மனிதன் இப்போதிருப்பதைவிட அதிக மூளைக்காரனாவது சாத்தியமாகக்கூடும்.

★

# ரோமுலோ பீடன் கோர்ட்

## வெனிஸுலாவின் ஜனாதிபதி

நான்கு நூற்றாண்டுகளுக்கு முன்பு ஸ்பெயின் தேசத்து மாலுமி ஒருவர் தென் அமெரிக்காவிலுள்ள வட பிரதேசத்தில் ஒரு பகுதியைக் கண்ணுற்று அதை வெனீஸ் நகருக்கு ஒப்பிட்டார். அன்றைய முதல் இப் பிரதேசம் வெனிஸுலா என்று வழங்கலாயிற்று. இப் பிரதேசத்தில் எண்ணெய் வளம் அதிகமாக இருக்கிறபடியால் கடந்த நான்கு ஆண்டுகளாக சென்ற 150 ஆண்டுகளில் கண்டிராத அளவுக்கு இப் பிரதேசம் செழிப்புப் பொலிவுடன் காட்சி அளிக்கிறது.

ஜனநாயக முறையைக் கையாளும் வெனிஸுலாவின் ஜனாதிபதி ரோமுலோ பீடன் கோர்ட் என்ற பெயர் கொண்டவர். இவர் 1958-ஆம் ஆண்டில் நடந்த பொதுத் தேர்தலில் வெற்றி பெற்றார். 1959 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் ஜனாதிபதியாகப் பதவி ஏற்றார். இவர் பதவி ஏற்பதற்கு முன்பு ஓர் பத்து ஆண்டுகள் வரை இந்நாடு சர்வாதிகார ஆட்சியில் சிக்கி உழன்றது.

பீடன் கோர்ட் ஓர் கற்றறிந்த மேதை. இவருடைய கியாதி உலகில் இன்னும் போதிய அளவு பரவாதது வியப்பிற்குரியது. நாட்டுப் பிரபல இரு கட்சிகளை ஒன்று கூட்டி ஓர் சிறந்த முறையில் இவர் நிர்வாகம் நடத்துகிறார். எதிர்க் கட்சிகளுக்கு இவர் அடக்கு முறைகளைக் கையாளாமல் சுதந்திரம் வழங்கியிருக்கிறார். ஆகையால், சட்டசபையில் நான்கு கம்யூனிஸ்டு அங்கத்தினர்கள் பொதுத் தேர்தலில் வெற்றி பெற்று இடம் பெற்றிருக்கிறார்கள். நாட்டின் ஜனத்தொகை 75 லக்ஷம். ஆண்டு தோறும் நூற்றுக்கு 3·6 சதவீதம் இத்தொகை பெருகிறபடியால் உலக நாடுகளில் பெருத்த அளவுக்கு ஜனத்தொகை பெருகும் நாடுகள் சிலவற்றுள் இந்நாடும் ஒன்றாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது.

மொத்த ஜனத்தொகையில் பாதி 18 வயதுக்குட்பட்டவர்கள். இயற்கை வளம் பெற்றும் முன்னணியில் இடம் பெறு நாடுகளுள் இந்நாடும் ஒன்றாகியபடியால் யூ.எஸ்ஸிலிருந்து 400 கோடி டாலர்கள் மூலதனம் இந்நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்காக முதலீடு செய்யப்பட்டிருக்கிறது. இந்நாட்டின் ஜனநாயக முறை ஆட்சியைக் கவிழ்க்க கியூபாவும், ரஷ்யாவும், இரகசிய முறைகளைக் கையாளுகிறது என்றும் அக்காரணத்தால் வெளிநாட்டு மூலதனம் மேலும் இந்நாட்டில் தாராளமாக வழங்கப்படவில்லை, என்றும் சொல்லப்படுகிறது.

இந் நாட்டின் இயற்கை வளத்தை விஞ்ஞான முறைகளைக் கையாண்டு பயனளிக்கச் செய்தால் சுமார் 5 கோடி மக்களுக்கு இதன் செல்வம் ஆதரவளிக்கும் என்றும் சொல்லப்படுகிறது. பீடன் கோர்ட்டின் நிர்வாகத் திறமையினால் பிள்ளைகளுக்குப் பள்ளிகளும், மக்களுக்கு வீட்டு வசதிகள், மருத்துவ விடுதிகள், நெடுஞ்சாலைகள் முதலியனவும் நிறுவப்பட்டிருக்கின்றன. சாதாரணமாகப் பள்ளிகளின் உட்புறத்தைக்கூடக் காண வாய்ப்புப் பெறாமல் இதுகாறும் இருந்து வந்த இளைஞர்களுக்கு ஆரம்பக் கல்வி பெற நிர்வாகம் சீர்திருத்தம் செய்திருக்கிறது. இவ்வளவு சிறந்த முறையில் இயங்கும் பீடன் கோர்ட்டின் நிர்வாகத்திற்கு வேட்டு வைக்க கம்யூனிஸ்டு கும்பல்கள் சமயம் பார்த்துக் கொண்டிருக்கின்றன. இவருடைய ஆட்சி முடிவு பெற இன்னும் ஓர் ஆண்டுதான் இருக்கிறது. என்றிருந்த போதிலும் இக் கும்பல்கள், ஆக்கிரமிப்பு, கொரில்லா முறை, கிளர்ச்சி, தாக்குதல் முதலியவைகளைக் கையாண்டு இவரை ஒழித்துக் கட்ட வழி தேடுகிறது.

பல்கலைக் கழகம் இக் கொள்கைக்கு ஓர் பெரிய உறைவிடமாகத் திகழ்கிறது. 1960 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் கம்யூனிஸ்டுகளின் தலைமையில் மாணவர்கள் ஆர்ப்பாட்டம் செய்து நான்கு நாள் வரை போலீஸுடன் துப்பாக்கியை ஏந்திப் போர் புரிந்தனர். 1961-ம் ஆண்டு ஜூன் மாதத்தில் யூ.எஸ். தூதர் ஓர் கண்காட்சி சாலையை சுற்றிப் பார்த்துத் திரும்பி வரும் முன் அவருடைய மோட்டார் வண்டி மாணவர்களால் தீக்கிரையாக்கப்பட்டது. அடுத்த ஆண்டு தூதர் அலுவலகத்தில் ஓர் குண்டு வெடித்தது. இவ்வாண்டு ஜனவரி மாதம் யூ. எஸ். ஐ. எஸ். அலுவலகத்திற்கு 50 கஜ தூரத்திற்கு முன்பு ஓர் வெடி குண்டு வெடித்தது. இதே அலுவலகத்தில்தான் இந் நிகழ்ச்சி நடந்த அரை மணிக்குப் பின்னர் யூ எஸ். தூதர் ஓர் சொற்பொழிவாற்ற இருந்தார்.

தினம் ஓர் இடத்தில் ஒரு போலீஸ்காரர் சுடப்படுவதும், மற்றோர் இடத்தில் ஓர் வெடிகுண்டு வெடிப்பதும், இருப்புப் பாதைகளை தளம் புரள வைப்பதும், இந் நாட்டில் சர்வ சாதாரணமாக நடைபெறும் பல நிகழ்ச்சிகளில் சிலவை.

பலாத்காரப் புரட்சியில் ஈடுபடும் கூட்டத்தார்கள் பீடன் கோர்ட்டின் உயிரைக் கவர்வதில் நாட்டம் கொண்டுள்ளார்கள் என்பதற்கு இதுகாறும் ஆறு தடவைகளில் அவர்கள் கையாண்ட முயற்சிகள் சான்றாகும். 1960 ஆம் ஆண்டு ஜூன் மாதம் 54 வயது நிரம்பிய இஜ் ஜனாதிபதியின் மீது இச்சதிக் கூட்டத்தார்கள் வீசிய குண்டினால் ஏற்பட்ட புண்கள் இன்னும் குணமாகாமல் இவர் கையில் கட்டுடன் தோற்றமளிக்கிறார். கியூபா அரசாங்கம் நாள்தோறும் இவருக்கு விரோதமாகப் பிரசுரிக்கும் பிரசாரங்களிலிருந்து வருங்காலத்தில் மேலும் மேலும் இவர் உயிரைக் களவாட முயற்சிகள் கையாளப்படும் என்பது வெட்ட வெளிச்சம் என்று அரசியல் அறிஞர்கள் கூறுகிறார்கள்.

இதற்குக் காரணம் இந் நாட்டில் உற்பத்தியாகும் பெட்ரோல் எண்ணெயை 1,200 மைல்களுக்கப்பாலுள்ள கியூபாவுக்கு விற்பனை செய்ய பீடன் கோர்ட் அனுமதிதர மறுப்பதும் அதனால் கருங் கடல் பிரதேசத்திலிருந்து ரஷ்யா ஏராளமாக இப்பண்டத்தை ஏற்றுமதி செய்ய நேரிட்டிருப்பதும் என்று தெரிய வருகிறது. இதனால் இவ்விரு கம்யூனிஸ்டு நாடுகளும் பீடன் கோர்ட்டின் நிர்வாகத்தைக் கவிழ்க்க சதி செய்வதில் வியப்பொன்றுமில்லை. ஜனாதிபதிக்குப் போதிய அளவு இராணுவ பலம் இருக்கிறபடியால் நாட்டில் கலகமோ, இராணுவப் புரட்சியோ ஏற்படுவதற்கு வியப்பில்லை. துர் அதிர்ஷ்ட வசமாக இந்நாட்டின் மீது போதிய அளவு நேசநாடுகள் கவனம் செலுத்தவில்லை.

பீடன் கோர்ட்டின் மீதும் இந்நாடுகளில் எதிர்ப்பு மனப்பான்மை இடம்பெறவில்லை; ஆகையால் இதுவே பிற நாடுகள் இந்நாட்டு நலனைப் பேணுவதற்குக் காட்டும் ஓர் நல்ல அறிகுறி என்று கொள்ள வேண்டும். *

---

**அரியலூர் டி. மு. கோ**

O. S. 717/62

காசிப்பிள்ளை வகையரு — வாதி

கலியமூர்த்தி பிள்ளை வகையரு — பிரதிவாதிகள்

2-ம் பிரதிவாதிக்கு ஷெ நம்பரில் உங்கள் பேரில் injunction க்கும்; மாசூல் நஷ்டத்துக்கும் தாவா செய்து 6—4—63ல் ஈரங்கி. ஆட்சேபனையை தெரிவிக்க தவறினால் எக்ஸ்பார்ட்டி தீர்ப்பு செய்யப்படும்.

S. P. முத்துக்குமாரசாமி
அட்வகேட்.

5 | 5491 | 191

---

**கோவில்பட்டி டி.மு.கோ**

O. S. No. 31/1963

சொக்கலிங்கம் சேர்வை — வாதி

சங்கரன் கோவில் தாலூசா தடியம்பட்டி மாடன் மகன் குட்டயன் 1 மூர்த்தீஸ்வரபுரம் வீமத் தலைவர் ஸ்திரீ சண்முகத்தாய் 2, சொக்கநாச்சியாபுரம் தங்கம் என்ற அண்ணாமலை சேர்வை 3, கல்லார் தோட்டம் கருப்பசாமி தேவர் மகன் பூலய்யா தேவர் 4 — பிரதிவாதிகள்

வாதி அடமானத்தின் பேரில் வியாச்சியம் செய்து 27—3—63 ல் வாய்தா ஏற்பட்டிருக்கிறது. ஆக்ஷேபனையை தெரிவிக்கத் தவறினால் எக்ஸ்பார்ட்டியாக முடிவாகும்.

K. வெங்கட்ட நாராயணன்
6/5492/192 அட்வகேட்.

---

# குழந்தைகளுக்கான புத்தகங்கள்

### பரிசுப் போட்டி பற்றிய அறிவிப்பு

இந்திய அரசாங்கக் கல்வி அமைச்சகம் குழந்தை இலக்கியங்களுக்கான ஒன்பதாவது பரிசுப் போட்டியை அறிவித்துள்ளது. நல்ல முறையில் தயாரிக்கப்பட்டிருக்கும் குழந்தைப் புத்தகங்கள் அல்லது கையெழுத்துப் பிரதிகளை நூலாசிரியர்களும் பிரசுரகர்த்தர்களும் அனுப்பி வைக்கலாம். போட்டி சம்பந்தமான முழு விவரங்களும் பின்வருமாறு:—

அரசாங்கம் மிகச் சிறந்தவை என்று கருதும் புத்தகங்களை எழுதிய ஆசிரியர்களுக்குப் பரிசுகள் வழங்கப்படும்.

ஒவ்வொரு பரிசும் ரூ 1000 மதிப்புள்ளது. எத்தனை பரிசுகள் வழங்க வேண்டும் என்பதை அரசாங்கம் அவ்வப்போது அறிவிக்கும். அறிவிக்கப்பட்ட எந்த பரிசையும், காரணம் காட்டாமல் திரும்பப் பெற அரசாங்கத்திற்கு உரிமையுண்டு.

போட்டிக்கு அனுப்பப்படும் தமிழ் நூல்களைக் கல்வி நெறியாளர், சென்னை-6 என்ற விலாசத்துக்கு அனுப்பவேண்டும். மற்ற இந்திய மொழிப் புத்தகங்களை, அந்த மொழியைப் பிரதேச மொழியாக உடைய மாநிலத்தின் கல்வித் துறைக் காரியதரிசிக்கு அனுப்பவேண்டும். ஹிந்தி, உருது சிந்திமொழிப் புத்தகங்களைக் கல்வி அதிகாரி, பிரிவு பி-3 கல்வி அமைச்சகம், இந்திய அரசாங்கம், புதுடில்லி என்ற விலாசத்துக்கு அனுப்பவேண்டும்.

ஒவ்வொரு புத்தகத்திலும் 5 பிரதிகள் அனுப்பவேண்டும். ஒவ்வொரு போட்டி விண்ணப்பத்துடனும் கஜானா சலான் இணைத்து அனுப்பவேண்டும். நூலாசிரியர் அனுப்புவதானால், 3 ரூபாய் மதிப்புள்ள சலானும், பிரசுரகர்த்தர் அனுப்புவதானால் 5 ரூபாய் மதிப்புள்ள சலானும் அனுப்பவேண்டும். இப் பணத்தைச் செலுத்தக் கஜானாவோ, அல்லது உப கஜானாவோ இல்லாவிட்டால் கிராஸ் செய்த தபால் பண ஆணையை அனுப்பலாம். செக்கோ அல்லது ரொக்கமோ பெற்றுக்கொள்ளப்படமாட்டாது. போட்டியில் கலந்து கொள்வதற்காகக் கட்டப்படும் கட்டணம் திரும்பக் கொடுக்கப்படமாட்டாது.

ஒவ்வொரு புத்தகம் அல்லது கையெழுத்துப் பிரதியின் தலைப்புப் பக்கத்திற்குப் பின்பக்கத்தில் புத்தகத்தின் தலைப்பு, அதன் பொருள், புத்தகம் 5-8 வயதுள்ள குழந்தைகளுக்கா, 9-14 வயதுள்ள சிறுவர்களுக்கா என்ற விவரம், ஆசிரியர் பெயர், விலாசம், அரசாங்க ஊழியரானால் பதவியின் தன்மை, பிரசுரகர்த்தர்களின் விலாசம், பெயர், வெளியான ஆண்டு, மொழி நூல், மொழிபெயர்ப்பா, சொந்தமா என்ற விவரம், விலை, கஜானா சலான் எண் ஆகிய விவரங்களோடு ஒரு உறுதி மொழியை ஆங்கிலம் அல்லது ஹிந்தியில் எழுதி அனுப்பவேண்டும். மேலும் இதற்கு முன்னர் பரிசு பெறவில்லையென்றும், விதிகளை ஏற்று, அதன்படி நடப்பேன் என்றும் உறுதி மொழிப் பத்திரத்தையும் அளிக்கவேண்டும்.

இந்தப் போட்டியில் யாரும் கலந்துகொள்ளலாம். பாடப் புத்தகங்கள் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டா. பதிப்புரிமையுள்ளவர் அனுமதியின்றி அனுப்பப்படும் மொழி பெயர்ப்பு அல்லது புத்தகச் சுருக்கம் பரிசீலனை செய்யப்படமாட்டாது. 1961-63-ல் பிரசுரமான புத்தகங்களைத்தான் அனுப்பவேண்டும். இத் தேதிக்கு முன்னர் முதல் பதிப்பாகிப் பின்னர் மறுபதிப்பான புத்தகங்கள் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டா. காலமான நூலாசிரியர் எழுதியுள்ள புத்தகங்களும். முந்திய போட்டிக்கு அனுப்பப்பட்ட புத்தகங்களும், முந்திய போட்டியில் பரிசு பெற்ற நூலின் மொழி பெயர்ப்பும் ஏற்றுக்கொள்ளப்படமாட்டா. இந்திய அரசாங்கத்திற்கோ, அல்லது மாநில அரசாங்கத்திற்கோ பதிப்புரிமையுள்ள அரசாங்க வெளியீடுகளுக்குப் பரிசளிக்கப்பட மாட்டாது. ஆனால், தேர்ந்தெடுக்கப்பட்டால் அவற்றின் பிரதிகள் வாங்கப்படும்.

பத்திரிகைக் காகிதத்தில் வெளியிடப்பட்டுள்ள புத்தகங்களும், மாநில அரசாங்கப் பரிசோ, அல்லது இந்திய அரசாங்கப் பரிசோ அல்லது அரசாங்க உதவி பெறும் நிறுவனத்தின் பரிசோ பெற்ற புத்தகங்களும், சர்வதேசப் போட்டியில் பரிசு பெற்றவையும் பரிசுக்குத் தகுதியுடையவை அல்ல.

இந்தப் பரிசுப் போட்டிக்காக அனுப்பப்படும் தமிழ்ப் புத்தகங்களைச் சென்னை-6ல் உள்ள கல்வி நெறியாளருக்கு 1963 மே 1-ந் தேதிக்குள் அனுப்பி வைக்கவேண்டும். மற்ற விவரங்களைக் கல்வி நெறியாளரிடமிருந்து பெற்றுக்கொள்ளலாம்.

★

மோட்டார் ஸ்பேர் பார்ட்ஸுகளுக்கு
இம்பீரியல் ஆட்டோமோபைல்ஸ்
போன்: 2008 பட்டர்வர்த் ரோடு திருச்சி-2.

கைத்தறி மில் ஜவுளிகள் B&C பேன்ஸி ஸில்க்குகளுக்கு
ஸ்ரீகணேசன் ஸ்டோர்ஸ்
நேதாஜி ரோடு. சைனபஜார், திருச்சி-2.

# பண்ணைச் செய்தி

### தென்னத்தோப்பில் ஊடு பயிர்.

இளம் தென்னந் தோப்புகளில் ஊடு பயிரிட்டால் கூடுதலான லாபம் கிடைக்கிறது.

தோப்புகளில் மரத்துக்கு மரம் 26 – 28 அடி இடைவெளி விடப்படுகிறது. டாபியோகா(மரவள்ளிக்கிழங்கு), சக்கரைவள்ளிக்கிழங்கு, வாழை, கராக்கருணை (சேனை), சேப்பங்கிழங்கு, நெல்,ராகி, சோளம்,அஞசி, கறிகாய்கள் இவைகளைப் போட்டால் மரங்கள் பெரிதாகிப் பலன் தரத் தொடங்கும் அளவும் இடம் வீணாகாமல் லாபமடையலாம்.

ஊடு பயிர்கள் செய்வதால் கூடுதலா இந்தப் பயிர்களின் பொருட்டு எருவும் உரமும் அடிக்கவேண்டும். இல்லாவிட்டால் ஊடுபயிர்கள் தென்னைக்கு இட்ட எரு உரச் சத்துகளை விழுங்கி விடும். *

### நெல் - உளுந்து சுழற்சி பயிர்

நெல்லோடு உளுந்தை சுழற்சிப்பயிராகப் பயிரிடுவது நல்லது.

ஒரிஸாவில் மூன்றாண்டுகள் சோதனை செய்து பார்த்ததில் உளுந்தையும் நெல்லையும் சுழற்சிப் பயிராக இட்டால் நெல்லில் 40 சதவிகிதம் கூடுதலாக மகசூல் கிடைக்கிறது என்று காட்டப்பட்டது. ஏக்கருக்கு 350 ராத்தல் உளுந்து கிடைத்தது. இதனால் விவசாயியின் வருமானம் இரட்டித்தது.

பாசிப்பயிரையும் நெல்லோடு சுழற்சி பயிராக இடலாம். பாசிப்பயிரோடு சுழற்சி செய்த நெல்லில் 30 சதம் தான் அதிக மகசூல் கண்டது. *

### கோடைக் கறிகாய்கள்

கோடைக் கறிகாய்களைப் பட்டத்திற்கு முன் விதைப்பதால் பயிர் சிவப்பு பரங்கி வண்டின் தாக்கலிலிருந்து தப்பும். வெள்ளரி (கக்கரி) பாகல், சுரைக்காய், முதலியவைகளை பனிகாலம் முடிந்தவுடன் சிவராத்திரிக்கு முன் விதைக்கவும்.

சிறு குழிகளில் மூன்று நான்கு விதைகளை விதைக்கவும். உருளைக்கிழங்கு வயல்களுக்கு நிரம்ப உரமிட்டிருந்தால் உருளைக்கிழங்குப் பயிர் நிற்கும் வயலிலேயே விதைக்கலாம். ஆற்றுப் படுகைகளிலும், குளத்துப் படுகைகளிலும் விதைக்கலாம்.

விதைக்க தாமதம் ஏற்பட்டால் முளைவிட்ட விதைகளை விதைக்கக்கூடாது. வெப்பம் காரணமாக அத்தகைய விதைகள் சரியாக வருவதில்லை.

பயிர் விரைவில் வளர ஒவ்வொரு பாத்திக்கும் ஒரு இரண்டுகாலன் கரைசலாக எருவடிக்கவேண்டும். (ஒரு காலன் தண்ணீரில் ஒரு சேர் சாணத்தையும் ஒரு அவுன்ஸ் அமோனியம் சல்பேட்டையும் கரைத்துக் கொண்டால் அதுவே கரைசல் எரு எனப்படும்) எருக் கரைசல் அடித்த பிறகு வெள்ளமாகத் தண்ணீர் பாய்ச்சவும். வயலுக்கு தழைகூட்டிகளை வராமல் பார்த்துக்கொள்ளவும்.

பி.எச்.ஸி, டி.டி.டி முதலியவைகளை பயன் படுத்துவதால் இந்தக் கறிகாய்களின் தரம் கெட்டு விடுவதாலும் மகரந்தச் சேர்க்கை செய்யும் தேனீக்கள் மடிவதாலும் இவைகளைப் பயன்படுத்தக் கூடாது. ஆனாலும் மிகச் சிறிய அளவுக்கு (1%-2%) பயன்படுத்தலாம். *


## இவ்வாண்டு விளைச்சல் பிரமாதம் !

இந்த விவசாயியின் தீர்க்கதரிசனம் நல்ல பலன் அளித்திருக்கிறது. சென்ற ஆண்டைவிட விளைச்சல் அமோகமாகவும், சிறப்பாகவும் உள்ளது. காரணம், விவசாயத்துக்கு நவீன முறைகளையே நம்புகிறான் இவன். சிறந்த விதைகளைப் பயிரிடுவதோடு, ராலீஸ் தயாரிக்கும் உரங்களையும் உபயோகிக்கிறான் என்பதை முக்கியமாகக் குறிப்பிடவேண்டும். ஆம், ராலீஸின் 'மரம் மார்க்' உரங்கள் நம்பிக்கைக்குகந்தவை என்பதோடு எளிதில் கிடைக்கின்றன. மேலும் ராலீஸ் நிபுணர் உங்களுக்கு உதவ எப்பொழுதும் காத்திருக்கிறார்.




ராலீஸ்(இந்தியா)லிமிடெட்
இந்தியா முழுதும்

RFY-46 TAM


### கரும்புச்சோளையை மருந்திட்டு கட்டுப்படுத்துவீர்

எம். சி. பி. ஏ. (ஒரு சதவிகித மருந்தை ஏக்கருக்கு 100 காலன் வீதம்) அடித்தோ, அல்லது சோடியம் உப்பு 2-4-D (0·1 அல்லது 0·2 சதவிகித மருந்தை ஏக்கருக்கு 100 காலன்) அடித்தோ சிறுக்கி என்று கூறப்படும் களையிலிருந்து கரும்புப் பயிரை காப்பாற்றலாம் என்று மத்திய கரும்பு ஆராய்ச்சி நிலையத்தார் கண்டுபிடித்துள்ளார்கள்.

சிறுக்கி (ஐபோமியா ஹெடிராசியா ஜேயியா) கரும்பு மகசூலில் 20-25 சதவிகித நஷ்டம் விளைவிக்கிறது. கரும்பின் மேல் படர்ந்து விரைவில் நான்கு ஐந்து வரிசைகளை மூடி விடுகிறது. சில சமயம் வயலில் நுழைய முடியாதபடி அடர்ந்து படர்ந்து விடுவதுமுண்டு. இதனால் மழை பெய்ததும் கரும்பு தலை சாய்ந்து வளைகிறது. கொழுத்தாடை பாழாகி கழி வளருவதில்லை. கரும்பின் நீளம் கனம் இரண்டிலும் 20-25 சதவிகித நஷ்டம் ஏற்படுகிறது.

வயலைச் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும். களை தோன்றியதும் முளையிலேயே பிடுங்கி அழித்துவிடவும். நிலத்தைக் கொத்திவிடவும் இந்த விதிகளை அனுசரித்தாலும் மேற்கூறப்பட்ட களையை கட்டுப் படுத்தலாம். *

திருச்சியில்

### கொதிகலன் தொழிற்சாலை

செக்கோஸ்லோவேக்கிய கூட்டு உதவியுடன் இந்தியாவில் ஏற்படுத்தப்படவிருக்கும் பிரதான கனரக எஞ்சினியரிங் திட்டங்கள் சம்பந்தமாக இந்திய சர்க்கார் தூதுகோஷ்டியொன்று பிராக் நகரத்தில் பேச்சு வார்த்தைகளை நடத்திவிட்டு மார்ச் 7-ந் தேதி காலை இந்தியா திரும்பியது. இந்தத் திட்டங்களுக்கான கடன் வசதிகள், யந்திர சாதனங்கள், உபகரணங்கள் ஆகியவற்றின் சப்ளை சம்பந்தமான நடைமுறை, சப்ளை ஆதாரங்கள் ஆகிய விஷயங்கள் பற்றி விவாதிக்கப்பட்டது.

திருச்சிராப்பள்ளியில் கொதிகலன்கள் தொழிற்சாலை, ராமச்சந்திரபுரம் கனரக விசை உபகரணங்கள் தொழிற்சாலை, ராஞ்சியில் வார்ப்பட,உலைக்களன் தொழிற்சாலைத் திட்டம், ராஞ்சியில் கனரக யந்திரக் கருவிகள் திட்டம் ஆகிய திட்டங்கள் செக்கோஸ்லோவேக்கிய வாகின் வசதியின் உதவியுடன் ஏற்படுத்தப்படவிருக்கின்றன. ★

---

**அரியலூர் டி. மு. கோ**

O. S. 56/63 I. A. 118/63

The general body of creditors cf Kandasami Padayachi represented by உ. தா. மேலூர் கிராமத்திலிருக்கும் ராமசாமி படையாச்சி மகன் முத்து படையாச்சி — வாதி

ராமலிங்க படையாச்சி வகையரு —பிரதிவாதிகள்

ஷை கேசில் பிரதிவாதிகளின் பேரில் ஷை கோர்ட்டு S. C. 1829/58 ல் (13—2—62) ல் E. A. 1273/61 ல் ஏற்பட்ட (Summary order) ஐ ரத்து செய்ய தாவா செய்து 18—3—63 ல் ஈரங்கி. ஆட்சேபணை உள்ளவர்கள், ஆட்சேபணைகளை தெரிவித்துக் கொள்ளலாம்.

P. மகாதேவன்
அட்வகேட்.

3 | 5487 | 189

---

**அரியலூர் டி. மு. கோ**

O. S. 55/63 I. A. 117/63

The general body of creditors of Kandasami Padayachi, represented by உ. தா. மேலூர் கிராமத்திலிருக்கும், ராமசாமி படையாச்சி மகன் முத்துபடையாச்சி — வாதி

ராஜா ஆயாள் வகையரு — பிரதிவாதிகள்

ஷை கேசில் பிரதிவாதிகளின் பேரில் ஷை court S. C. 1829/58 ல் (13—2—62) ல் E A. 1272/61 ல் ஏற்பட்ட (Summary order) ஐ ரத்து செய்ய தாவா செய்து 18—3—63 ல் ஈரங்கி. ஆட்சேபணை உள்ளவர்கள் ஆட்சேபணைகளை தெரிவித்துக் கொள்ளலாம்.

P. மகாதேவன்
அட்வகேட்.

2 | 5486 | 188

---

**திருச்சி டி. மு. கோர்ட்**

O. S. 875/1961 E. P. 1960/1962

லா. தா. சிறுகனூர் கி. ஜெயலக்ஷிமி அம்மாள் — வாதி

லா. தா. பெருவள நல்லூர் வைத்திலிங்க ஆசாரி மகன் மாணிக்கம் ஆசாரி — பிரதிவாதி

ஷை நம்பர் வாதி பெற்றிருக்கும் ஈட்டு டிகிரிப்படி ரூ. 2118-21 nP வசூலிக்க ஈட்டு சொத்தை ஏலம் போடும்படி வாதி மனு கொடுத்து ஷை தேதியில் ஏல நோட்டீசு வாய்தா 5—4—1963 தேதி போடப்பட்டிருக்கிறது என்பதை இதன் மூலம் தெரிவிக்கப்படுகிறது.

V. R. பாஷ்ய சக்ரவர்த்தி
4/5488/190 அட்வகேட்.

Edited & Published by its owner Sri. Triloka Sitaram and Printed by him at his Shivaji Newsprinters, 24, A-Theradi Bazaar, Tiruchy-2.

Single copy six nP ANNUAL SUBSCRIPTION INCLUDING 4 SPECIAL NUMBERS: For INDIVIDUALS Rs. 5. For INSTITUTIONS Rs 10.